தேர்தல்தானே? தனித்துப் போட்டியிட்டாலும் ஜெயித் தள்ளிடலாம்ங்றேன்...'' — மூப்பனார்; ஜெயந்தி.



# மூப்பனாரின் கடைசி யுத்தம்

**தேர்தல் ஜூலையில் வருகிறதோ, அல்லது டிஸம்பரில் வருகிறதோ, வருவது நிச்சயம்; வருவதற்கு முன் அக்கப் போர்கள் குவிவதும் நிச்சயம். இந்த வாரம் காங்கிரஸ் கட்சியினரைத் துருவிய போது...**

டெல்லியில் பல வருடங்களாக உட்கார்ந்து கொண்டு, விரல் நுனியில் பாலிடிக்ஸ் பண்ணிக் கொண்டிருந்த மூப்பனாருக்குத் தமிழ்நாடு காங்கிரஸைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதில் ஒரு சிக்கலும் இருக்காது என்றுதான் பலர் கருதினார்கள். பதவியேற்றதும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியைக் கலைத்து விட்டுக் கோஷ்டித் தலைவர்களை அணைத்துக் கொண்டு புதிய கமிட்டியை உருவாக்கினார். அப்படியும் திருப்தியடையாத சிலருக்குப் பாராளுமன்றத் தொகுதி அமைப்பாளர், சட்டமன்றத் தொகுதி பொறுப்பாளர் போன்ற பதவிகளைக் கொடுத்தார். ஆனால் மூப்பனாரின் செயல்பாட்டு வேகத்தைக் குறைக்கும் விதத்தில் அவரது ஆதரவாளர்களே செயல்பட்டு வந்தனர். மூப்பனார் எங்கு சென்றாலும், ''வருங்கால முதல்வரே, வருக!'' என்று

* ''நாம என்ன ஆட்டம் போட்டாலென்ன, கடைசியிலே ராஜீவின் பார்வை எப்படி இருக்குமோ...!''

—மறைமலை நகர் மாநாட்டின் போது அஸ்ஸாமியப் பிரதிநிதியுடன் மூப்பனார்.

போஸ்டர். போட்டார்கள். பொறுப்பாளர்களா, கோஷ்டித் தலைவர்கள்? 'இந்த ஆள் கட்சித் தலைவராக இருக்கும் போதே நம்மை அவ்வப்போது ஒதுக்கி விடுகிறார்; போதாததற்கு முதல்வராக வேறு வந்து விட்டால் என்ன செய்வது?' என்று யோசித்தார்கள். அந்த நேரத்தில் மறைமலை நகர் மாநாடு வேறு வந்து தொலைந்தது. மூப்பனார் இமேஜை 'ஓஹோ' என்று மாநாடு உயர்த்தி விடும் என்ற எதிர்பார்ப்புக்கு மாறாக, மூப்பனார் நிலை தாழ்ந்து விட்டது!

டெல்லியில் அதிகார வட்டத்துக்குள் இருக்கும் பலர் மூப்பனாருக்கு எதிராகச் செயல்பட ஆரம்பித்திருக்கிறார்கள். அ.இ.கா.வின் பொதுச் செயலாளர் குலாம் நபி ஆசாத் இப்போது பிரதமர் வீட்டுச் செல்லப் பிள்ளை. இவரது குரல்தான் பிரதமருக்கு இப்போது புரிகிறது. 'தமிழ்நாட்டில் காங்கிரஸ் மாநாட்டைச் சரியாக நடத்தவில்லை' என்று பிரதமரிடம் புகார் போயிருக்கிறது. மூப்பனார் தில்லியில் இல்லாததே அவருக்கு இப்போது ஒரு பலவீனமாக இருக்கிறது. தமது தரப்பு வாதத்தை முன் வைக்க முடியாதிருக்கிறது.

குலாம் நபி ஆசாத் இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்த போது தமிழ்நாட்டில் இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்தவர் தங்கபாலு. இவர், "ராஜீவின் முழு நம்பிக்கையைப் பெற்றவர் மூப்பனார். அவர் வழி நடப்பதுதான் தமிழ்நாடு காங்கிரஸுக்கு நல்லது" என்று கட்டுப்பாடான சிப்பாய் போல் பேசுகிறார் என்றாலும், மூப்பனார் விருப்பப்படி காரியங்கள் நடக்கப் போவதில்லை என்றும் தெரிகிறது! ஜெயலலிதாவுக்கு 134 இடங்களைத் தந்து காங்கிரஸ் 100 இடங்களை எடுத்துக் கொண்டு கூட்டுச் சேர்ந்து விட வேண்டும் என்று காங்கிரஸ் கமிட்டி முடிவெடுத்து விட்டதாகச் சமீபத்தில் செய்திகள் பரவின. இந்தச் செய்திகள் மூப்பனாரை மிகவும் சங்கடத்தில் ஆழ்த்தியுள்ளன. ஜெயலலிதாவுக்கு அதிக ஸீட்டுகள் கொடுத்து அவர்தாம் முதல்வர் என்றால், தமக்குத் தமிழ்நாடு தலைவர் பதவியே வேண்டாம் என்று கூறி விடும் நிலையில் இருக்கிறார் மூப்பனார்.

ஆனால், "காங்கிரஸ் தனித்துப் போட்டியிட்டால் பல தொகுதிகளில் டெபாஸிட்டே கிடைக்காது" என்று பிரதமரிடம் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஜெயலலிதாவுடன் கூட்டுச் சேர்ந்து விடும் பட்சத்தில் மூப்பனார் டெல்லிக்கு மாற்றப்படலாம். கமலாபதி திரிபாதிக்கு உள்ளது போல் மூப்பனாருக்கும் ஏதாவது, ஒரு சிறப்புப் பதவி கொடுத்து முடக்கி விடுவது என்பதுதான் எதிர்ப்பாளர்களின் திட்டமாம்.

இதற்கு மறுபுறமாக, ஜெயலலிதாவுக்கு இரட்டை இலைச் சின்னம் கிடைக்க வேண்டுமானால் காங்கிரஸுக்குப் பணிந்து போக வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதாகவும் மத்திய அரசாங்கத்தின் பல ஏஜென்ஸிகளை முடுக்கி விட்டு, ஜெயலலிதா கூட்டத்தை மிரட்டி வழிக்குக் கொண்டு வரும் வேலையும் நடைபெறுவதாகவும் பேசப்படுகிறது. இதற்கு உதவியாக தங்கராஜுவின் பிரீஃப்கேஸ் விவகாரம் மாட்டியது.

"என்ன, காங்கிரஸ் நிலைமை இப்படி இரண்டுங்கெட்டானாக இருக்கிறதே?" என்று தமிழ்நாட்டுப் பொதுச் செயலாளர் ஒருவரைக் கேட்ட போது அவர் சொன்னார்: "ஒவ்வொரு காங்கிரஸ் தொண்டனும் தனித்துப் போட்டியிடுவதையே விரும்புகிறான். ஆனால் தம் பதவி சுகத்துக்காகக் காங்கிரஸ் கட்சியை அடகு வைக்கச் சிலர் விரும்புகிறார்கள். அதனால் ஜெயலலிதாவுடன் கூட்டுச் சேர்ந்து விட வேண்டும் என்று பிடிவாதமாக இருக்கிறார்கள். பதவி ஆசை ஒழிந்தால்தான் தமிழ்நாட்டில் காங்கிரஸ் தன்மானத்துடன் தனியே தலை நிமிர்ந்து நிற்க முடியும்!"

சத்தியமான வார்த்தைகள்தான்!

— லம்பாஜி

புகைப்படங்கள்: ஆனந்த்



"எல்லாப் படத்திலேயும் கெஞ்சிக் கூத்தாடி ஒரு பாட்டாவது பாட சான்ஸ் கேட்டு வாங்குற அந்தப் பின்னணிப் பாடகர் ஏன் இந்தப் படத்தில பாடல?"

"தயாரிப்பாளரோட பஞ்சப்பாட்டைக் கேட்டுக் கப்—சிப்னு ஆயிட்டார் மனுஷன்!"

— குடியாத்தம் மூ. மோகன்.

# பொறுத்தது போதும்; பொங்கி எழுவோம்!

"எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் கள்ள நோட்டு அச்சடிப்பதாக எதிர்க்கட்சியினர் பிரசாரம் செய்தார்கள், பொறுத்துக் கொண்டோம்; கள்ளச் சாராயம் காய்ச்சுவதாகக் குற்றம் சாட்டினார்கள், பொறுத்துக் கொண்டோம், ஆனால் இப்போது கள்ள லஞ்சம் வாங்குவதாகப் புரளி பண்ணுகிறார்கள்! இதை எப்படிப் பொறுப்பது? பொறுத்தது போதும்; பொங்கி எழுவோம்!"

— பி. அனந்த பத்மநாபன், சென்னை—11.




தலைவர்: குவெய்த் விமானத்தைக் கடத்தியவர்களை எப்படியாவது சந்திக்கணும்னு துடிக்கிறீங்களே, எதுக்கு?

திடமதி: நாளை நாம் ஆட்சிக்கு வந்த பிறகு ஒரு அவசரத்துக்கு எம். எல். ஏ.க்களைக் கடத்தணும்னு அவங்க டெக்னிக்கைத் தெரிஞ்சு வைச்சுக்கிட்டா நல்லது பாருங்க... அதுக்குத்தான்!

— ஆர். அப்துல் சலாம், திருச்சி — 20.




"பண வீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும்தான், மறுக்கவில்லை; ஆனால், இதற்காக அயல்நாட்டு நிபுணர்களை ஆலோசனை கேட்க வேண்டும் என்கிறார்களே, அதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை. ஏன், நம் நாட்டில் பிரபல ஆயுர்வேத, யுனானி, சித்த வைத்தியர்கள் இல்லையா? வீக்கத்தைக் கட்டுப்படுத்த இவர்களுக்குத் தெரியாதா? அயல்நாட்டு நிபுணர்கள் எதற்கு?"

— எஸ். லட்சுமணன், சென்னை — 45.

திடமதி: நம்ம கௌரவத்தைக் குலைக்கிற மாதிரி எதிர்க்கட்சிக்காரங்க அடாவடித்தனமாப் பேசறாங்க, தலைவரே!

தலைவர்: இப்ப, புதுசா அப்படி என்ன பேசிட்டாங்க?

திடமதி: நாம மெடிகல் சீட்டுக்குப் பத்தாயிரம் ரூபாய் வாங்கறோமாம்; பிரசாரம் பண்ணுறாங்க. நம்ம மதிப்பு என்ன ஆறது? இருபதாயிரத்துக்குக் குறைஞ்சு எப்பவாவது வாங்கியிருக்கோமா?

— என். மாலதி, கோயமுத்தூர் — 45.



# ஓ! மாம்பழமே!



பிரிட்டனிடம் இந்தியா அடிமைப்பட்டுக் கிடந்த காலம் அது. பிரிட்டனின் ஸவுதாம்டன் துறைமுகத்தில் விக்டோரியா என்னும் கப்பலில் இந்திய தேசத்து மாம்பழங்கள் சில வந்து இறங்குகின்றன. அந்த மாம்பழங்களை வரவழைத்தது யார், எந்த விருந்தில் பரிமாறப்பட்டது என்பதைத் தொடர்ந்து பத்திரிகைகளில் காரசாரமான விவாதம் நடக்கிறது. இந்திய மாம்பழம் பிரிட்டிஷ் அரசாங்க விருந்தில் பரிமாறப்படுவது பேரவமானம் என்பதில் ஆரம்பித்து, இத்தகைய சுவையான பழத்தை உற்பத்தி செய்யும் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிப்பதா? கூடவே கூடாது! என்பது வரையில் பலவிதமான அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்படுகின்றன! இந்த விவரங்களைத் தொடர்ந்து, இந்தியாவிலும் அதுபற்றித் தீவிரமான கருத்துப் பரிமாற்றங்கள் நடக்கின்றன. பத்திரிகைகள் பலதங்கள் தங்கள் பாணியில் எழுத, முஸ்லிம் லீக் ஒருவித கருத்துத் தெரிவிக்க, ஆதிதிராவிடர் சமூகம் வேறு விதமாகப் பேச, கடைசியில் மகாத்மாவின் உபவாசத்தில் போய் முடிகிறது. காந்திஜி தமது உபவாசத்தைக் கைவிட வேண்டும் என்று ராஜாஜி வழக்கம் போல் முயற்சி மேற்கொள்கிறார். ''மாம்பழம் சாப்பிட நாங்கள் இருக்கிறோம்; தாங்கள் கவலைப்பட வேண்டாம்'' என்று இந்திய மக்கள் மகாத்மாவை ஒருமனதாகக் கேட்டுக் கொள்கிறார்கள். ''இப்படிக் கேட்டுக் கொண்டவர்களில் நானும் ஒருவனானகையால், இதோ ஒரு

- மாங்கொட்டைகள் செடிகளாக முளை விட்டதும்...
- ...அவற்றைத் தொட்டியில் நட்டு ஒரு பென்சில் கனத்துக்கு வளர்த்து...



மாம்பழத்தைச் சாப்பிட்டுத் தொலைக்கிறேன்!" என்று கட்டுரையை முடிக்கிறார், நகைச்சுவை மன்னன் அமரர் கல்கி.

"1934 – ஆம் ஆண்டு மே மாதத்தில் அவர் எழுதிய இந்தச் சிரிப்புக் கட்டுரைக்கு அவர் தந்த தலைப்பு: "ஓ! மாம்பழமே!"



* ...தாய் மரத்துடன் ஒட்டுப் போட வேண்டும்.
* நடுவதற்குத் தயாரான ஒட்டு மாங்கன்று.

**மா**ம்பழத்தின் சுவை, மணம், அதைச் சாப்பிடுவதில் உண்டாகும் இணையில்லாத சந்தோஷம் ஆகிய அனைத்தையும் உணர்த்தக் கூடிய சொற்றொடர் ஒன்று இருக்குமானால் அது அமரர் கல்கி தமது கட்டுரைக்குத் தந்த இந்தத் தலைப்புதான்! "ஓ! மாம்பழமே" என்று வியந்து போற்றுவதை விடச் சிறப்பாக அதன் அருமை பெருமைகளை எப்படி ஒருவர் உணர்த்த முடியும்? மாம்பழத்திடம் மனத்தைப் பறிகொடுக்காத சராசரி மனிதர்கள் யார்தான் இருக்கிறார்கள்?

ஆனால், நல்ல, உயர் ரகப் பழங்கள் மத்திய, கீழ் மத்தியதர வகுப்பினருக்கு எட்டாக் கனியாகிக் கொண்டிருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை. இத்தனைக்கும் உலகெங்கிலும் விளையும் மாங்காய் மற்றும் மாம்பழங்களுள் 66.2 சதவிகிதம் இந்தியாவில்தான் விளைகின்றன. இந்தியாவில் பழச் சாகுபடி நடைபெறும் மொத்த நிலப்பரப்பில், 42.6 சதவிகிதம் மாம்பழம்தான் சாகுபடியாகிறது. மாந்தோப்புக்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதாலும் அதிக மகசூலைத் தரும் உயர்ரக ஒட்டுக் கன்றுகளை உருவாக்கி அவற்றைப் பிரபலப்படுத்துவதாலும் உற்பத்தியைப் பெருக்கி எல்லோருக்கும் எட்டும் விலையில் மாம்பழங்களைக் கிடைக்கச் செய்யலாம் என்று விவசாயத் துறை வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

உத்திரப் பிரதேசம், பீஹார், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்கள்தான் அதிகமான மாம்பழங்களை விளைவிக்கின்றன. தமிழ்நாட்டில் மாம்பழச் சாகுபடிக்குச் சாத்தியக் கூறுகளும் இயற்கைச் சூழலும் மிக அதிகமாக இருப்பினும் அவை முறையாகப் பயன்படுத்தப்படாததால் அனைத்திந்திய அளவில் நமது மாநிலம் பின்தங்கியே இருக்கிறது.

மஹாராஷ்டிராவிலிருந்து அல்பான்ஸோ – இதை ஆபூஸ் என்றும் சொல்கிறார்கள் – ரகமும், உ. பி. யிலிருந்து தாசேஹாரி என்ற ரகமும் நிறைய ஏற்றுமதி செய்யப்படுகின்றன. – முக்கியமாக வளைகுடா நாடுகளும், பிரான்ஸ், மலேசியா, பிரிட்டன், ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகளும் மாம்பழங்களை இந்தியாவிடமிருந்து வாங்குகின்றன.



ஜூஸாகவும், ஜாம் வடிவிலும், பதப்படுத்தப்பட்டு டின்னில் அடைத்த வடிவிலும் சுமார் பதினோராயிரம் டன் மாம்பழம் ஏற்றுமதி செய்யப்படுகிறது. சில அபூர்வமான உபயோகங்களும் மாம்பழத்திற்கு உண்டு:

- மாங்கொட்டையைச் சுட்டு உண்ணலாம்.
- சோப்பு தயாரிப்பிற்குப் பயன்படும் ஒரு வகை கொழுப்புச் சத்தை மாங்கொட்டையிலிருந்து பெறலாம்.
- இதே கொழுப்புச் சத்து சாக்லேட் தயாரிப்பில் கோகோவுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது.
- மாம்பழத்திலிருந்து ஒரு வகை மது பானமும் தயாரிக்கலாம்!

**மா**ங்காய் மற்றும் பழங்களின் உபயோகம் ஒருபுறமிருக்க, ஒட்டுமாங் கன்றுகளை உருவாக்கி விற்பனை செய்வதே ஒரு தொழிலாகச் செய்யப்பட்டு வருகிறது. தமிழகத்தில் கிருஷ்ணகிரி, தர்மபுரி பகுதிகளிலும் திருப்பத்தூரிலும் பல ஆயிரம் குடும்பங்கள் இத்தொழிலால் வயிறு வளர்க்கின்றன. மாங்கொட்டைகளைச் சேகரிப்பது சிலருக்குத் தொழிலாக இருக்கிறதென்றால், கொட்டைகளை ஊன்றி முளைவிடச் செய்து அவை ஒரு பென்சில் கனத்துக்கு வளரும் வரை பராமரிப்பது மற்றொரு தொழில். இந்தக் கன்றுகளை வாங்கிப் போய்த் தாய் மரத்தோடு ஒட்டுப் போட்டு (grafting) ஒட்டுக் கன்றுகளை உருவாக்கித் தருவது மூன்றாவது தொழில். சேலம், தர்மபுரி மற்றும் ஆந்திராவின் சில பகுதிகளிலிருந்து ஒட்டு மாங்கன்றுகள் ஏற்றுமதிகூடச் செய்யப்படுகின்றன. ஓர் ஒட்டு மாங்கன்றுக்கு உள்ளூரில் நாற்பத்தைந்து முதல் ஐம்பது ரூபாய் வரை கிடைக்கிறது!

இந்தியாவில் மாம்பழச் சாகுபடியைப் பிரபலப்படுத்தி, ஊக்குவித்து, புதிய ரகங்களை உருவாக்குவதில் இஸ்லாமியர்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்கள். வடாற்காடு மாவட்டம், வேலூர் அருகே ஒன்பது லட்சம் மாமரங்களை நடச் செய்து ஒரு சுல்தான் 'நவ்லக் கார்டன்ஸ்' என்று அதற்குப் பெயரிட்டதாகச் சொல்கிறார்கள். காதர், ருமானி, ஹிமாம்பஸந்த் போன்ற மாம்பழப் பெயர்களாலும் நாம் இதை அறிகிறோம். நமது நாட்டின் தலைசிறந்த மாம்பழமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது லக்னோவைச் சேர்ந்த தாசேஹாரிதான். மஹாராஷ்டிரத்து அல்பான்ஸோ, வாரணாஸியின் லாங்க்ரா, ஆந்திராவின் பங்கனபள்ளி மற்றும் சுவர்ணரேகா ஆகியவை அந்தந்தப் பகுதிகளின் 'ஸ்பெஷல்' வகைகள்.

தமிழ்நாட்டில் மட்டுமே விளையும் ரகம் மல்கோவா. தவிர, சேலத்தில் குண்டு, நடுச்சாலை, பெங்களூரா; வடார்க்காட்டில் கலாபாட், ராஜபாளையத்தில் சப்பட்டை; செங்கல்பட்டு மாவட்டத்தில் ருமானி என்று பிரதேசத்துக்குப் பிரதேசம் பல வகைப் பழங்கள்; ஒவ்வொன்றும் தனியான மணம், ருசி, குணத்துடன் விளங்குகிறது. மிக அதிகமான விளைச்சல் — தர்மபுரியில்தான். ஸ்ரீரங்கத்தில் உள்ள தாத்தாச்சாரியார் தோட்டத்தில் நாற்பத்தைந்து வகை மரங்கள் உள்ளன! இவற்றுள் ஆந்திராவிலிருந்து வந்து சேர்ந்து, காவேரிக் கரை மீது பற்றுக் கொண்டு, காய்த்துக் குலுங்கும் ஹிமாம்பஸந்த் மிகவும் பிரசித்தி. ஹிமாம்பஸந்த் மரங்கள் குறைந்த அளவு காய்களையே ஈன்றாலும் சுவையிலும் தரத்திலும் அவை தன்னிகரற்றவை. காரட் தோலைப் போல் மெல்லிய தோலுடன் சதைப் பற்று நிரம்பி, அளவில் பெரியதாக இருக்கும். ஒரு ஹிமாம்பஸந்த் பழத்தின் விலை...? இந்த வருடம் மே முதல் வாரத்தில் பதினைந்து ரூபாய் சொன்னார்கள்!

ஒரே மரத்தில் இருபத்திரண்டு வகை மாஞ்செடிகளை ஒட்டுப் போட்டும், இயற்கையில் நிகழும் அயல் மகரந்தச் சேர்க்கையின் மூலம் பல புதிய ரகங்களைத் தோற்றுவித்தும் அவற்றை இனவிருத்தி செய்தும் பல சாதனைகளைப் புரிந்து கொண்டிருக்கிறார் தாத்தாச்சாரி தோட்டத்தின் உரிமையாளர் எஸ். ஆர். வி. தாத்தம்.

'**பொ**ங்கும் காலத்தில் புளி; மங்கும்

* எஸ். ஆர். வி. தாத்தம்.



* எஸ். எஸ். நாகராஜன்.



# "சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்"

நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால் மிதுன ராசிக் குழந்தையைப்பற்றிய சுவையான தகவல்களைத் தெரிந்து கொள்ளுங்கள். இந்த ராசிக் குழந்தை குதூகலமாகவும், சுறுசுறுப்பாகவும் இயங்குவதைக் காணலாம். புதிய இடங்களைக் காண்பதில் அதிக ஆர்வம் கொண்டது. எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டும் மிதுனக்குழந்தைக்காகவே. உங்கள் பொது அறிவை வளர்த்துக் கொள்ளவும்.




அதிக உணர்ச்சி வசப்படும் இந்தக் குழந்தை, தன் குடும்பத்தாரிடத்தில் பற்றுகொண்டது.

ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்குப் "பாலடங்கிய ஃபாரெக்ஸை" ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.









**சுவையுடன் வளரும் வழி**

GX/48/213 TML



இவன்: ''நீ கையில் வைச்சிருக்கிற பாத்திரம் ஈயமா, பித்தளையா, எவர்சில்வரா?''

பிச்சைக்காரர்: ''எதுக்குத் தாயே கேக்குறீங்க?''

இவன்: ''பாத்திரமறிந்து பிச்சையிடுன்'னு பெரியவங்க சொல்லியிருக்காங்களே, அதான்...!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.




நண்பர்: உங்க ஆபீஸ் நடுவிலே 'விக்டரி ஸ்டாண்ட்' போட்டிருக்கே, எதுக்கு....?

மானேஜர்: ஒவ்வொரு நாள் சாயந்தரமும் வீட்டுக்குப் போறதுக்கு முன்னாடி அன்னிக்கு ரொம்ப நேரம் முழிச்சிருந்தவங்களே வரிசைப்படி அது மேல நிக்க வைச்சு எல்லோரும் கை தட்டுவோம்!

எஸ். பாலகிருஷ்ணன்.

''ஆராய்ச்சி மணியை அடிப்பது யார்?''

''அந்த மணியைச் செய்து கொடுத்தவர்தான் மன்னா!''

''ஏன்?''

''மணி செய்து கொடுத்ததற்கு அவருக்கு இன்னும் பில் செட்டில் பண்ணவில்லையாம்''

— சேத்தூர் அன்பழகன்.



காலத்தில் மாங்காய்' என்று ஒரு பழமொழியே உண்டு தமிழ்நாட்டில். மாமரச் சாகுபடிக்குத் தண்ணீர் மிகக் குறைவாகவே தேவை என்பதை உணர்த்தும் வகையில்தான் இப்பழமொழி தோன்றியுள்ளது. நல்ல ஒட்டு மாங்கன்றுகளைத் தேர்ந்தெடுத்து, நட்டு, முதல் ஐந்து வருடங்களுக்கு அவற்றைக் கவனமாகப் பராமரித்து வந்தால் பிறகு முப்பது வருடங்கள் வரை அவை நல்ல பயனளித்துக் கொண்டே இருக்கும்.

மரங்கள் நடப்படும் இடம் நல்ல வடிகால் வசதியுள்ள செம்மண் அல்லது மணல் கலந்த களிமண் பூமியாக இருந்தால் நல்லது. மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு, முதல் ஐந்து வருடங்களுக்கு, ஒட்டுப் பகுதிக்குக் கீழே தோன்றும் இலைகளை உருவிப் போட்டு விட வேண்டும். ஒட்டுப்பகுதிக்கு மேல்தோன்றும் பூக்களையும் கிள்ளி எடுத்துவிட வேண்டும். அப்போதுதான் மாங்கன்றின் சக்தியும் வீரியமும் சேமிக்கப்பட்டு ஆறும் வருடம் முதல் மிகத் தரமான, சுவையான காய்களைப் பெற முடியும்.

வளர்ந்த மரங்களைப் பராமரிப்பதில் மூன்று விஷயங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும்: முதலாவது — மரங்களில் பூக்கள் அரும்பும் முன்னரும், அரும்பிய பிறகும், பூக்கள் பிஞ்சாக மாறும் போதும் — மூன்று முறை — கண்டிப்பாகப் பூச்சிக் கொல்லி மற்றும் பூஞ்சாளன் கொல்லி கலந்த மருந்தை அடிக்க வேண்டும். ஒரு மரத்தில் தோன்றும் பூக்களுள் 0.2 சதவிகிதத்துக்கும் குறைவான பூக்களே காய்க்கின்றன. இவற்றையும் பூச்சி தாக்க அனுமதித்தால் விளைச்சல் குறையும் என்பதோடு மரம் நிரந்தரமாகப் பாதிக்கப்படும் வாய்ப்பும் உள்ளது. இந்த ஆண்டு மாம்பழ உற்பத்தி குறைந்துள்ளதற்கு ஒரு காரணம், தை மாதத்தில் மாம்பூக்கள் தோன்ற ஆரம்பித்தபோது, காலமில்லாத மழை பெய்து, பூக்களை உதிர்ந்து போகச் செய்ததுதான்.

இரண்டாவது பராமரிப்புக் குறிப்பு: மரங்களைச் சுற்றிலும் பூமியைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். மூன்றாவதாக, அவ்வப்போது மாட்டுச் சாணம், ஆட்டுச் சாணம், கம்போஸ்ட் போன்ற இயற்கை உரங்களையும் சிறிதளவு டை அமோனியம் ஃபாஸ்பேட்டையும் இட வேண்டும். உரத்தை வேர்ப் பகுதியில் இடாமல், மரத்தின் கிளைகள் மரத்தைச் சுற்றி எவ்வளவு தூரம் பரவியுள்ளனவோ, அந்தச் சுற்றளவில் பூமியைக் கொத்தி, உரமிட வேண்டும்.

மற்ற விவசாய விளைபொருட்களோடு ஒப்பு நோக்குகையில் மா சாகுபடிக்குச் செலவும் குறைவு, லாபமும் அதிகம். ஆனால் இயல்பாகவே ஒரு வருடம் விட்டு மறு வருடம் தான் மாமரங்கள் நன்றாகக் காய்க்கின்றன. மா சாகுபடியின்பால் விவசாயிகள் அதிகம் நாட்டம் செலுத்தாமைக்கு இது ஒரு காரணம் என்பதோடு, நல்ல, தரமான ஒட்டு மாங்கன்றுகள் சகாயமான விலையில்

தாராளமாகக் கிடைக்காமல் போவதாலும் புதிய மாந்தோப்புகள் விரைவாக உருவாகாமல் இருக்கின்றன.

தாத்தாச்சாரியார் தோட்டத்தில் நடப்பது போன்று ஆங்காங்கே தனியார் முயற்சியில் மா சாகுபடியில் ஆராய்ச்சிகளும் விரிவாக்கமும் தமிழகத்தில் நடந்து வந்தாலும் தமிழ்நாட்டின் மாம்பழ வளத்தைக் குறித்து நாம் கவலைப்பட வேண்டிய சூழ்நிலையும் உருவாகியுள்ளது. புதிய மாந்தோப்புக்கள் விரைவாக உருவாகாமல் இருப்பதோடு, சில பழைய தோப்புகளும் அழிக்கப்பட்டு வருகின்றன என்பது கண்டனத்துக்கும் கவலைக்கும் உரிய விஷயம். தற்போது தமிழகத்தில் 34,602 ஹெக்டேர் பரப்பளவில் மாமரங்கள் பயிரிடப்பட்டு 5,32,650 டன் பழங்களை ஈன்று வருகின்றன. இவற்றுள் மிகப் பிரபலமான சேலம் நடுச்சாலை, பீத்தர், பெங்களூரா போன்ற ரகங்கள் இன்னும் சில வருடங்களில் அழிந்தே போகக் கூடிய சூழ்நிலை உருவாகியுள்ளது! சேலம் பகுதியில் இந்த மரங்கள் அடங்கிய தோப்புக்களைக் கட்டடம் கட்டுவதற்காக அதிவேகமாக அழித்து வருகிறார்கள். ஏற்காடு மலைச் சரிவுகளில் ஒரு மருத்துவக் கல்லூரி அமைக்கத் திட்டமுள்ளதாகவும், அவ்வாறு செய்தால் தங்கள் மாந்தோப்புகள் பல அழிந்து போகக் கூடும் என்றும் சில விவசாயிகள் அச்சம் வெளியிட்டுள்ளனர்.

தொடர்ந்து மூன்று ஆண்டுகளாகப் பருவமழை பொய்த்ததால் பாதிக்கப்பட்ட விவசாயிகள், கிடைத்த விலைக்கு நிலங்களை விற்று விடுவது ஆச்சரியமில்லை. மேலும் மார்க்கெட் நிலவரத்தை நாடி பிடித்துப் பார்த்து, சூட்சுமத்துடன் விலை கேட்டுப் பெறும் சாமர்த்தியமும் நமது விவசாயிகளிடம் இல்லை என்பதால், கடினமாக உழைக்கும் அவர்களைக் காட்டிலும் இடைத் தரகர்களே நல்ல லாபம் பெறுகிறார்கள்.

அரிய பொக்கிஷங்களான, நடுச்சாலை, பீத்தர் போன்ற மாம்பழ ரகங்களை அழிய விடுவது மகா பாவம். இதை எண்ணினால் "ஓ! மாம்பழமே!" என்று சோகத்தோடுதான் கூறத் தோன்றுகிறது. நமது அரசாங்கம் உடனடியாக முன் வந்து இந்தத் தோப்புகள் அழிக்கப்படுவதைத் தடை செய்வதோடு மாம்பழச் சாகுபடியையும் ஊக்குவித்துக் காய்ப்பு குறைவாக இருக்கும் ஆண்டுகளில் விவசாயிகளின் ஜீவனத்துக்கு உதவக் கூடிய வகைகளில் இன்ஷியூரன்ஸ் திட்டங்களை வகுத்துத் தந்தும் உதவ வேண்டும். இந்திய, தமிழக மண்ணுக்கும் சீதோஷ்ணத்துக்கும், உகந்த இந்த மாம்பழச் செல்வத்தைப் பெருக்கிக் கொள்வதுதான் புத்திசாலித்தனம்.

மத்திய அரசு மட்டத்தில் இந்தத் திசையில் முதல் அடி எடுத்து வைக்கப்பட்டுள்ளதையும் குறிப்பிட வேண்டும். பெங்களூரை அடுத்து, ஹெசர்கட்டாவில் உள்ள **Indian Horticulture Research Institute** சில புதிய வகை மா இனங்களை உருவாக்கி வருகிறது. இவற்றைக் குறைந்த நிலப் பரப்பில் நெருக்கமாக நட்டு, நிறைய மகசூல் பெற வாய்ப்பு உள்ளது. தவிர ஒரு வருடம் விட்டு மறு வருடம் காய்க்கும் மாமரத்தின் இயல்பை ஆராய்ச்சிகள் மூலமும் பரிசோதனைகள் மூலமும் மாற்றி, ஒவ்வொரு வருடமும் நல்ல மகசூலைத் தரக் கூடிய தன்மையையும் இந்த மரங்களுக்கு ஊட்டியுள்ளார்கள். ஆரம்பக் கட்டத்தில் உள்ள இம்முயற்சி வரவேற்கத்தக்கது.

வீட்டுக்கொரு மரம் வளர்ப்போம் என்று மத்திய அரசுடன் சேர்ந்து கோஷமிடும் நமது மாநில அரசும் இதுபோன்ற முயற்சிகளை மேற்கொள்ளலாம்.

தகவல்கள்: **1. எஸ். எஸ். நாகராஜன்**
**2. தாத்தாச்சாரி தோட்டம், ஸ்ரீரங்கம்.**

தொகுப்பு: **சீதா ரவி**

அட்டை வண்ணப்படம் மற்றும் புகைப்படங்கள்: **கே. வி. ஆனந்த்**

அடுத்த இதழில்...

- ஜனாதிபதி ஆட்சியே நீடிக்கலாமா...?
- வரிச் சலுகைகள் அறிவித்ததில் உள்நோக்கம் உண்டா...?
- துரித நடவடிக்கைகள் காங்கிரஸ் கட்சியின் 'இமேஜை' வளர்க்கத்தானா...?
- மறைமலை நகர் மாநாட்டுக்குத் தமிழக அரசு அதிகார துஷ்பிரயோகம் செய்ததா?
- அரசியல்வாதிகள் கொடுக்கும் மனுக்களை என்ன செய்கிறீர்கள்...?

— ஆளுனர் பதில் கூறுகிறார்



# ஓர் வேண்டுகோள்

சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் காட்டாங்கொளத்தூர் செங்கற்பட்டு மாவட்டத்தில் மறைமலை நகரிலுள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளுக்கும், நிராகரிக்கப்பட்ட முதியோர்களுக்கும், உண்ண உணவும், உடையும், மேலும் பாதுகாப்பும் அளித்து சமுதாயத்தில் அரியதொரு பணியை ஆற்றிக் கொண்டு வருகிறோம். இப்பணிக்கு பல பொது மக்களின் நல்லாசியும், பொருளுதவியும், பணமாகவோ அல்லது பொருளாகவோ கொடுப்பதன் மூலமாக சுமார் 30 ஆண்டுகளாக பல ஆயிரக்கணக்கானோர் வாழ்க்கையில் பல நல்ல நிலைக்கு வந்து தேசத்திற்கு பயனுள்ள குடிமகனாக வாழ்ந்துள்ளார்கள்.

இக்கல்வி ஆண்டில், ஆதரவற்ற குழந்தைகளுக்கு சீருடை, கல்வி சாதனங்கள் மேலும் அன்றுட வாழ்வில் வாழ்ந்திட தேவையான பொருட்கள் தேவைப்படுகிறது. எனவே இப்பத்திரிக்கையை படிக்கும் அன்பர்கள் மனமுவந்து தாராளமாக உதவிச் செய்யுமாறு குழந்தைகளின் சார்பாக அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மனமுடையோர் ஆசிரமத்தின் வளர்ச்சிக்காக நிலமாகவோ அல்லது வீடாகவோ தானம் செய்து அதில் கிடைக்கும் வருவாயில் குழந்தைகளின் வளர்ச்சிக்கு பயன்படுத்தலாம். ஒரு குறிப்பிட்ட தொகையினை கொடுத்தால் அத்தொகையினை பொதுநிதியில் வைத்து அதில் கிடைக்கும் வட்டியை வைத்துக் கொண்டு தீபாவளி, பொங்கல் மற்றும் குழந்தைகளுக்கு விருந்தும் அளிக்கலாம்.

தாங்கள் பிறந்த நாளையோ, திருமண நாளையோ அல்லது தங்களது பெற்றோரின் நினைவு நாளையோ, ஆதரவற்ற குழந்தைகளுக்கு விருந்தளித்து ஆத்ம திருப்தி பெற்று, இறைவனின் நல்லாசி பெறுவீர்களாக! மேற்கண்ட விவரங்களுக்கு அணுக வேண்டிய முகவரி:

**நிர்வாகி,**
**சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்,**
**நெ. 20, கம்பர் தெரு,**
**கிழக்கு தாம்பரம்,**
**சென்னை - 600 059.**
**தொலைபேசி எண்கள்: 401078 & 402354**

# மறியல் போராட்டத்தில் தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள்

* "வெற்றி கிட்டும் வரை போராடுவோம்!"



மறியல் போராட்டத்தில் இறங்கியிருக்கிறார்கள், தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியைச் சேர்ந்த ஆசிரியர்கள். தமிழ்நாட்டில், அரசுப் பள்ளிகளில், ஒன்றாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை பாடம் எடுக்க 1,84,000 ஆசிரியர்கள் இருக்கிறார்கள். இவர்களில் கிட்டத்தட்ட எழுபத்தைந்து சதவீத ஆசிரியர்கள் தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியில்தான் உறுப்பினராக இருக்கிறார்கள். இவர்கள் கோரிக்கைகள் தான் என்னென்ன?



* "சிறைச்சாலை என்ன செய்யும்?"

கூட்டணியின் நிர்வாகிகளான கே. எஸ். இராசு, சு. ஈஸ்வரன், து. இளங்கோ ஆகியோரைச் சந்தித்து விசாரித்தோம்.

"அந்த வயிற்றெரிச்சலை ஏன் ஸார் கேக்கறீங்க...? எங்கள் போராட்ட வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தால், பதினைந்து, பதினாறு வருட காலம் பின்னோக்கிப் போக வேண்டும். 1971 — இல் இருந்து 1976 வரை மத்திய அரசு பதினைந்து அகவிலைப் படிகளை அறிவித்தது. ஆனால் அப்போது ஆட்சியிலிருந்த கலைஞர் அரசு ஏழு அகவிலைப் படிகளைத்தான் ஆசிரியர்களுக்கு அளித்தது. எட்டு அகவிலைப் படிகள் கொடுக்கப்படாத தன் பாதக விளைவு, 1980 — ஆம் ஆண்டு மூன்றாம் ஊதிய கமிஷன், ஆசிரியர்களுக்கான சம்பள விகிதத்தை நிர்ணயித்தபோது தான் தெரிய வந்தது. அப்போது இருந்த அடிப்படைச் சம்பளத்தையும் அகவிலைப் படியையும் சேர்த்துப் புதிய அடிப்படைச் சம்பளத்தைக் கொடுத்தார்கள். ஆனால் எங்களுக்குத்தான் எட்டு அகவிலைப்படிகள் கொடுக்கப்படவில்லையே! அதனால் நாங்கள் விட்டுப் போன அகவிலைப்படியையும் சேர்த்துத்தான் எங்களுக்கு அடிப்படைச் சம்பளம் நிர்ணயிக்க வேண்டும் என்று போராடி



## ஜாக்கி சான்!

இவர் பெயரைச் சொன்னதுமே மெய்சிலிர்த்துத் துள்ளும் ரசிகர்கள் ஏராளம். புரூஸ் லீக்கு அடுத்தபடியாக இன்று இளைஞர் பட்டாளத்தின் ஹீரோவான இவரிடம் ஒரு பிளஸ் பாயிண்ட், மெலிதான நகைச்சுவை.

ஏழாவது வயதில் சினிமாப் பிரவேசம்; பத்து வயதுக்குள் கால் செஞ்சுரி போட்டாயிற்று! பின்னர் ஸ்டண்ட் காட்சிகளை அமைத்துக் கொடுக்கும் வேலை பார்த்தார். பிறருக்குப் பயிற்சி அளிக்கும் போது ஸ்பிரிங் போலத் துள்ளிக் குதித்துச் சண்டை போடும் இவர் ஸ்டைல் கவனத்தைக் கவர, இவரே ஹீரோவாக ஒப்பந்தமானார். இன்று பாடகர், கதாசிரியர், டைரக்டரும்கூட!

டூப்பா? மூச்! ஜாக்கி சானுக்கு டூப் என்றால் அவமானம் இல்லையோ! அதனால் இவர் செத்துப் பிழைத்த தருணங்கள் பல உண்டு! "ப்ராஜெக்ட் ஏ" படத்தில் ஒரு விபத்து. அதிர்ஷ்டவசமாய்ச் சிறு காயங்களுடன் தப்பினார். "ஆர்மர் ஆஃப் காட்" படத்தில் எலும்பு முறிவு. ஆனால் எதிர்பார்த்ததற்கும் விரைவாக உடல்நலம் தேறி, டாக்டர்களையே அசத்திவிட்டார்! "மனோ பலம்" என்றனர் டாக்டர்கள். இது நம்மவரை நினைவூட்டவில்லையோ!

— மௌக்ஷி.

---

னேம். ஆனால் எம். ஜி. ஆரின் அரசு எங்களை ஏமாற்றிவிட்டது.

"சரி, அதுதான் போகட்டும் என்றால், நாடு முழுவதும் உள்ள கல்வி ஒரே விதமாக இருக்க வேண்டும் என்றும், ஆசிரியர்களின் சம்பள விகிதங்கள் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்றும் மத்திய அரசால் நியமிக்கப்பட்ட சட்டோபாத்யாயா கமிஷன் கூறியது. இதன்படிதான் புதிய கல்வித் திட்டம் 1.6.88 முதல் தமிழ்நாட்டில் அறிமுகப்படுத்தப்பட இருக்கிறது. இந்த நிலையில், சட்டோபாத்யாயா கமிஷன் பரிந்துரைகளின்படி ஏற்கெனவே மத்திய அரசுப் பள்ளிகளிலும், குஜராத், ஹரியானா, பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் மாநில அரசுப் பள்ளிகளிலும் ஊதியம் 1.1.88 முதல் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இந்தத் திருத்தப்பட்ட ஊதியத்தின்படி பார்த்தால், எங்களுக்கும், மத்திய அரசுப் பள்ளிகளில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கும் இடையில் அடிப்படைச் சம்பளத்தில் மட்டும் அறுநூறு ரூபாய் வித்தியாசம் இருக்கிறது.

ஏற்கெனவே பலமுறை ஏமாற்றப்பட்ட நாங்கள் இந்த முறையும் ஏமாறத் தயாராக இல்லை. 1.6.88 முதல் புதிய கல்விக் கொள்கைப்படி பாடத் திட்டம் அமுலுக்கு வந்தால் வேலைப்பளு அதிகமாகும். அதனால்தான், மத்திய அரசுப் பள்ளிகளில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு இணையான சம்பள விகிதத்தைக் கோருகிறோம். எங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றாவிட்டால், 1.6.88 முதல் எந்த ஆசிரியரும் பள்ளிக்குப் போக மாட்டார். இதனால் கிட்டத்தட்ட முப்பத்திரண்டு லட்சம் மாணவ மாணவிகள் பாதிக்கப்படுவார்கள். இந்த நிலை ஏற்பட்டால் அதற்கு அரசே பொறுப்பு. இந்தக் கோரிக்கைதான் முக்கியமானது. இது தவிர போனஸ், மருத்துவ வசதி, வீட்டு வசதி, பிரயாணச் செலவு போன்ற வேறு பல கோரிக்கைகளும் இருக்கின்றன."

**கொசுறு — 1:**

மறியல் போராட்டத்தில் இறங்கியிருக்கும் ஆசிரியர்கள், போன கல்வியாண்டில் செய்ய வேண்டிய எல்லா வேலைகளையும் செய்து விட்டு மாணவர்களுக்கு எந்தப் பாதிப்பும் இல்லாமல் விடுமுறையில்தான் போராட்டத்தில் இறங்கியிருக்கிறார்கள். இது பாராட்டத் தக்கது.

**கொசுறு — 2:**

புதிய கல்விக் கொள்கைப்படி 1.6.88 முதல் பாடம் போதிக்க வேண்டிய ஆசிரியர்களுக்கு என்ன விதமாகப் பயிற்சி தருவது என்று அரசே இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை! மேலும், ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டிய ஆசிரியர்களுக்கு வழிமுறைகள் (guidelines) இன்னும் கொடுக்கப்படவில்லை. புத்தகங்கள் தயாராகவில்லை.

**கொசுறு — 3:**

மத்திய அரசு ஆசிரியர்களுக்கு இணையாகச் சம்பள விகிதத்தைத் தமிழக ஆசிரியர்களுக்குக் கொடுத்தால் கிட்டத்தட்ட 350 கோடி ரூபாய் செலவாகுமாம். மத்திய அரசு தொடக்கத்தில் இந்த இழப்பை ஈடுகட்டத் தயாராக இருந்தாலும், போகப் போக தமிழக அரசேதான் அதிகப்படிச் செலவைச் சுமக்க வேண்டும். தமிழக அரசு தன் முடிவை அறிவிக்கக் கால தாமதமாகும் என்று கூறப்படுகிறது. காரணம், கவர்னர் ஏதாவது சம்பள உயர்வை அறிவித்து விட்டால், "எல்லாம் தேர்தலை மனத்தில் வைத்துச் செய்கிறார்கள்" என்று எதிர்க்கட்சிகள் பிரசாரம் செய்யுமே! அந்தச் சங்கடம்தான்!

— கௌசல்யா

உழைப்பாளி ஹஸனும் அதிர்ஷ்ட தேவதையும்



16 பக்க வண்ணப் படக் கதை

கதை: ஆனந்தி

படம்: விஜு

மேல் வகுப்புக்குச் செல்லும் தம்பி தங்கைகளுக்கு வாழ்த்துக்கள்!

# கோகுலம்

ஜூன் இதழ் விற்பனையாகிறது!



சின்ன மானும் வேட்டை நாயும்

— ஸ்வீடிஷ் கதை



பாரதப் பிரதமர்களின் கதை!

— ஜானகிமணாளன்

மற்றும் கோகுலம் தம்பி தங்கைகளின் • பிருந்தாவனப் பக்கங்கள் • கேள்வி – பதில் • சிரிப்பு அம்சங்கள் • அறிவியல் கட்டுரைகள் • கவிதைகள் • கதைகள். •


பொற்கோவில் உளாக
பயங்கர வாதிகள்
சரண்! வெற்றி வெற்றி!


வெற்றி! வெற்றி! தினம் தினம்
படுகொலைகள்! ஊர் ஊரா!
காலிஸ்தானம் அடையும் வரை
ஓயமாட்டோம்!


உங்களுடன் தான் கூட்டணி!
நான் சொல்வது தான் கூட்டணி!


பண்ருட்டி
மூப்பனார்
அவங்க அப்புத் தான் சொல்துவாங்க! கூட்டணி வெச்சுக் கேவோமுங்க!


பசு நாக்குழை தான் பலம் வரும்!
யோகா தான் உடல் உறுதி பெற வழி!
பசுவாவது! பலமாவது!
வி.பி. சிங்
சந்திர சேகர்




தியானம் தான் மன வலிமை தரும்!
ராமராவ்
தியானம்
ராமராவ் முறைகள்



# கல்கி

1988 மே 29
மலர் 46 இதழ் 44
விபவ வைகாசி 16



## நீர்மூழ்கிக் கப்பலும் மூழ்கடிக்க முடியாத ஊழலும்

நீர்மூழ்கிக் கப்பல் பேர ஊழலை ராஜீவ் அரசு அமுக்கிவிடப் பார்த்தது. ஆனால் அது மூழ்க மறுத்து மீண்டும் மிதக்கிறது! இந்த நீர்மூழ்கி பேரம் தொடர்பாக, சென்ற ஆண்டு பிப்ரவரி மாதம் நமது ஜெர்மானிய தூதர் அனுப்பிய ஒரு தந்தி, கமிஷன் பற்றிக் குறிப்பிட, அதுகுறித்து அன்றைய பாதுகாப்பு அமைச்சர் வி. பி. சிங், விசாரணைக்கு உத்தரவிட, அவர் பதவியே பறிக்கப்பட்டது. இன்று அதே நீர்மூழ்கி பேர ஊழல் விசுவ ரூபமெடுத்திருக்கிறது!

நீர்மூழ்கிக் கப்பல் பேரத்தில் எந்தவிதமான ஊழலும் நடக்கவில்லை என்று அண்மையில் நற்சான்றிதழ் வழங்கினார் பாதுகாப்பு அமைச்சர் கே. ஸி. பந்த். அரசாங்கம் அதிகாரபூர்வமான ஆய்வு நடத்தி இதனை உறுதிப்படுத்திக் கொண்டது என்பதாகவும் தெரிவித்தார். நாடாளுமன்றத்தில் இவ்வாறு அவர் பேசி முடித்து அந்தச் செய்தி பத்திரிகைகளில் வெளியாகி அந்த மை முழுவதும் உலர்வதற்கு முன்பாகவே இந்திய ஆடிட்டர் ஜெனரலின் அறிக்கை வெளியாகியுள்ளது. இந்த அறிக்கையானது, பந்த் நாடாளுமன்றத்தில் அளித்த உறுதிமொழியைத் தாக்கித் தவிடுபொடியாக்குகிறது.

இந்திய ஆடிட்டர் ஜெனரல் என்பவர் மிகவும் உயர்வாக மதிக்கப்படுகிறவர். விருப்பு, வெறுப்பு இன்றியும், தைரியமாகவும் அவர் செயல்பட வேண்டும் என்பதற்காகவே அவருக்குச் சில விசேஷ அதிகாரங்கள் மட்டுமின்றிப் பாதுகாப்புக்களும் வழங்கப்பட்டுள்ளன. ஏ. பி. வெங்கடேசுவரனுக்குக் கல்தா கொடுத்த மாதிரி, ஆடிட்டர் ஜெனரலைப் பிரதமரால் பதவி நீக்கம் செய்துவிட முடியாது. அந்த அதிகாரம் நாடாளுமன்றத்துக்கே வழங்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு, ஆடிட்டர் ஜெனரல் அச்சமின்றிச் செயலாற்ற வசதியாக நமது அரசியல் சாசனத்தை வகுத்த அறிஞர்கள் முன்யோசனையுடன் சில காரியங்களைச் செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள்.

நீர்மூழ்கி பேரம் பற்றி ஆடிட்டர் ஜெனரல் கூறுவதன் சாராம்சம் என்னவென்றால், 1. தரக்குறைவான நீர்மூழ்கிக் கப்பல்கள் வாங்கப்பட்டுள்ளன. 2. இதைவிடத் தரத்தில் உயர்ந்ததும், விலையில் பதினொரு கோடி குறைந்ததுமான நீர்மூழ்கிகளை வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு இவற்றை அரசு வாங்கியுள்ளது. 3. வாங்கப்பட்டுள்ள நீர்மூழ்கிகளின் ஒப்பந்தம் போடுவது தாமதமானதால்தான் அவற்றின் விலை உயர்ந்தது. அதிகப்படியாக இருபத்தாறு கோடி ரூபாய் தர நேர்ந்தது.

இவ்வாறு நீர்மூழ்கி பேரத்தின் மீது மும்முனைத் தாக்குதல் நடத்தியுள்ளார் ஆடிட்டர் ஜெனரல். தரத்திலும் மட்டம்; விலையும் அதிகம். உயிர்த் தியாகத்துக்கு எப்போதும் தயாராயிருக்கும் நமது கடற்படை வீரர்களுக்குத் தரமான யுத்த தளவாடங்களை வாங்கித் தந்த திருப்தியாவது வரி செலுத்தும் மக்களுக்கு இருக்க வேண்டாமா? பதினொரு கோடி என்பது ஆட்சியில் உள்ளவர்களின் பாட்டன் வீட்டுச் சொத்தல்லவே! மக்களின் வரிப்பணம்தான் விரயமாகிறது.

ஆடிட்டர் ஜெனரல் அறிக்கையின் முக்கியமான வரிகள் பின்வருமாறு: ''கடற்படையினர் ஒரு குறிப்பிட்ட அம்சத்தில் தரக் கட்டுப்பாடு மிகவும் அவசியம் என்று கருதினர். அதாவது நீர்மூழ்கி எழுப்பும் சப்தம். (நீர்மூழ்கி போடும் சப்தம் அதிகமானால் எதிரிக் கப்பல் அதனை எளிதாகக் கண்டுபிடித்து அழித்துவிடக் கூடும்) இந்தச் சப்தம் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு அதிகமானால் நீர்மூழ்கியை நிராகரிக்கும் உரிமை கடற்படைக்கு இருக்க வேண்டும் என்று கூறியிருந்தனர். ஆனால் அரசு செய்து கொண்ட ஒப்பந்தத்தில் இந்த உரிமை பெறப்படவில்லை. அபராதம் விதிக்கும் உரிமை மட்டுமே பெறப்பட்டது. இப்படி விட்டுக் கொடுத்ததற்குக் காரணம், இந்த பேரத்தை முடிக்க முடியாமல் போய் விடுமோ என்ற கவலை அரசுக்கு இருந்ததுதான் என்று ஆடிட்டர்களுக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களிலிருந்து அனுமானிக்க முடிகிறது.''

இதற்கு என்ன அர்த்தம்? பேரத்தை முடிப்பதில் என்ன அவசரம்? வேறு நிறுவனங்கள்தாம் இதைவிட மலிவு விலையில் இதைவிடத் தரமான நீர்மூழ்கிகளைத் தரக் காத்திருந்தனவே? பின்னணியில் என்ன நடந்திருக்கக்கூடும் என்பதை மக்கள்தான் யோசித்து முடிவுக்கு வரவேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# புலிப்பாறைப் பட்டிக்கு அதிகாரிகள் படையெடுப்பு!

* ஹெக்டே பற்றித் தங்கள் தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்ததைப் படித்தேன். அதில் நேர்மையானவர்க்கும், ஒழுக்கமானவர்க்கும் முதல்வர் பதவி, பிரதமர் பதவி இவையெல்லாம் 'முட்கிரீடங்கள்' என்ற வரிகள் மிக மிகச் சரியானவை.

ஆத்தூர், ராஜ்பிரபு.

* சகாய மேரி தன் எதிர்காலத்தைத் தொலைத்து விட்டு அழுகிறார்... அவரை விட அவரது இடுப்பில் இருக்கும் குழந்தையை நினைத்தால் மிகவும் பரிதாபமாய் இருக்கிறது.

தஞ்சை, கவிஞர் சுகன்.

* செருப்பு வீச ஒரு செட் அப் என்று முதல் பக்கத்திலேயே அரசியல் நகைச் சுவைகளைத் தளபதி இடமிருந்து விட்டார்கள்! பூவுக்குள் பூகம்பம் பட விமர்சனம் புதுமையாக இருந்தது.

நெல்லை, வி. செல்லத்துரை.

* தலையங்கம் கண்டேன். காங்கிரஸ் கட்சிக்கு மாற்று ஜனதாதான். ஆனால் வெண்ணெய் திரண்டு வரும் பொழுது தாழியை உடைக்கிற மாதிரி, கட்சியின் தலைவரே, கட்சிக்குள் 'அண்டர் கிரவுண்டு' வேலையில் ஈடுபட்டுள்ளதைக் கண்டால், ஜனதாவுக்கு இதெல்லாம் சாபக்கேடா என எண்ணத் தோன்றுகிறது.

விருத்தாசலம், ஏ. டி. சௌமியன்.

* நாற்பதாண்டு கால சுதந்திரத்தில் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படைத் தேவையான மின் உற்பத்தியில் கூட, தன்னிறைவு காணாத நிலையில், வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்போம், எனும் ரீதியில் பிரதமரின் புதிய முழக்கம் அமைந்திருப்பதைத் தராசு பதிலில் கூறியிருந்தீர்கள். அது வேலையற்ற என்னைப் போன்றவர்களுக்கு வேதனையான சிரிப்பைத்தான் தந்தது!

அந்தணப்பேட்டை, முத்து உதயகுமார்.

* பாரிஜாதன் எழுதிய 'இங்கே கு.க. செய்யப்படுகிறது' சிறுகதை படு யதார்த்தம். குடும்பக் கட்டுப்பாட்டுக்கு 'கேஸ்' கிடைக்காமல், சம்பளப் பணம் கிடைக்காமல், அவதிப்படும் பெண் ஊழியையின் மன உணர்வைக் கதையில் வெளிப்படுத்திய விதம் இதயத்தை இளக வைத்தது.

மதுரை, எஸ். மூர்த்தி.

* 'இங்கே கு.க. செய்யப்படுகிறது' சிறுகதையைப் படித்த போது கல்கி 3.4.88 இதழில் இடம் பெற்ற ஆனந்தாயியின் சோகக் கதை மனத்தில் தோன்றி இம்சித்தது!

திருத்துறைப்பூண்டி, ஜெ. பிஸ்மி.

* இரண்டு மணி நேர சினிமாக் கதையைச் சிறுகதையாக்கிக் கொடுத்திருக்கும் மல்லிக் ரங்கநாதனின் சாமர்த்தியமே சாமர்த்தியம்! 'காதல் சிறுவை' நிஜ வாழ்க்கையில் அரிதாக நடக்கும் ஓர் அரிய சம்பவத்தின் அருமையான வார்ப்பு.

தங்கமாபுரிப்பட்டணம், வி. என். ராஜேஷ்.

* புலிப்பாறைப்பட்டி மக்களுக்கு ஊரின் பெயரைப் போலவே மனம் திடகாத்திரமானதுதான்! இல்லாவிட்டால் இவ்வளவு அவல நிலையில் வாழ்க்கை நடத்த முடியுமா...? தேர்தலைப் புறக்கணிக்க அவர்கள் முடிவு செய்ததில் ஒன்றும் ஆச்சரியமில்லை என்றே தோன்றுகிறது.

சென்னை – 33, வி. எஸ். வாசன்.

* 21–ம் நூற்றாண்டை நோக்கி என்னும் அட்டைப் படக் கட்டுரை மிகவும் அருமையானதாக இருந்தது. பிரதமர் இந்த அவலங்கள் எல்லாம் புரியாமல் அடுத்த நூற்றாண்டை நோக்கிச் செல்வதை நினைத்துச் சிரிப்பதா அல்லது நம் நாடு அடுத்த நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்கப் போகும் இந்த நேரத்தில் இந்த ஊர் மக்கள் இவ்வாறு தண்ணீரில் திண்டாடுவதை நினைத்து அழுவதா என்று ஒன்றும் புரியவில்லை.

சென்னை – 39, பா. எழில் முருகன்.

## வட்டமேஜை

* காழ்ப்பு உணர்வற்ற காமிராவின் கண்கள் புலிப்பாறைப்பட்டி மக்களின் இடர்களைக் கூடக் கலை நயத்துடன் படம் பிடித்திருந்தது. அவர்களின் இன்னல் இதயத்தைப் பிசைந்தது. அந்த அவலங்களுக்கு நீங்கள் ராஜீவை மறைமுகமாகச் சாடியதைத்தான் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

குமாரபாளையம், மு. செ. முருகேசன்.

* '21ம் நூற்றாண்டை நோக்கி....' கட்டுரை மிகவும் அருமையாக இருந்தது. ஊருக்குள், அனைவருமே கல்கியைப் பார்த்து மிகவும் பாராட்டினார்கள். புகைப் படங்கள் மிகவும் அருமை; குறிப்பாக அட்டைப்படம் அற்புதமாக இருந்தது. கட்டுரை வெளியான உடனேயே பி.டி.ஓ., மற்றும் இன்ஜினியர் ஆகியோர் எங்கள் ஊருக்கு வந்து பார்த்து விட்டு, ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவரோடு ஊரிலுள்ள பெரியவர்கள் சிலரையும் வெம்பக் கோட்டைக்கு அழைத்துச் சென்று பேசிப் பாலம் கட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய கட்டுரை வெளி வந்த உடனே அதிகாரிகள் வந்ததைக் கண்டு ஊர் மக்கள் அனைவரும் வியந்து பாராட்டுகிறார்கள். தங்களுக்கு எங்களின் மனமார்ந்த நன்றி.

புலிப்பாறைப்பட்டி, பி. ரவீந்திரன்.

* 'மதிப்புக்குரியவர்களின் நன்மதிப்பைப் பெற்ற செழியன்' இந்த வார்த்தை போதுமே அவரின் தகுதிக்குச் சான்றாக! அவர் முதல்வரானால் தமிழகத்திற்கு ஒரு ஹெக்டே கிடைப்பார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் தமிழகத்தில் அவர் சார்ந்துள்ள கட்சி வளர்ச்சியுறவில்லையே!

தீர்வுகள்' கதையில் 'தேசம் கூட ஒரு வகையான கலை தான்' என்று உன்னதமான ஓர் உணர்விற்கு உருவகமே கொடுத்து விட்டார் தமயந்தி. அந்தக் கருத்து மனத்தில் பதிந்து விட்டது.

காட்டூர், எஸ். அருள்மொழி.

# கல்கி விடுமுறை மலர் 1988

வண்ணங்களில் —

* எஸ். பி. பாலசுப்பிரமணியம்: சௌராஷ்டிரா
* ஆழ்கடல் அற்புதங்கள்
* கார்த்திக்; மீனாட்சி சேஷாத்திரி
* வைஷ்ணவி தேவி யாத்திரை.
* ரமேஷ் கிருஷ்ணன்; கித் சேத்தி
* நாகாலாந்து காட்சிகள்.
* அலெக்ஸாந்தர்; மூப்பனார்
* குடை விரிக்கலாம்; காற்றில் மிதக்கலாம்!
* பி. ஸி. சொர்க்காரின் மந்திர ஜாலம்
* திருவிடைக்கழி முருகன்; தெய்வயானை.
* செல்லப்பன் — அரஸ்: நகைச்சுவை ஓவியங்கள்
* டிஸ்னிலாந்து
* கோகுலம் பக்கங்கள்
* இயற்கைக் காட்சிகள்
* மற்றும் ஏராள உள்நாட்டு, அயல்நாட்டுப் பயணக் கட்டுரைகள்; சிறுகதைகள்; இரண்டு நாவல்கள்.

320 பக்கங்கள் : : விலை ரூ. 10/—.

* ஜூன் முதல் வாரத்தில் கிடைக்கும்.

ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது பதிவுத் தபாலில் பெற ரூ. 15 அனுப்பவும்.

மானேஜர், கல்கி, சென்னை—600 032.



* நாகாலாந்தில் ஒரு காட்சி

— வண்ணப்படம்: யோகா




# SUGUNA

THE RENOWNED NAME
FOR OVER 25 YEARS



DOMESTIC
COUPLED PUMPSET

நீண்ட நாட்கள் தொல்லையின்றி உழைக்க உட்பாகங்கள். அனைத்தும் தொழில் நுணுக்கங்களோடு பொருத்தப்பட்டு பரிசோதனைக்கு பின்பே விற்பனைக்கு கிடைக்கின்றது விற்பனைக்குப் பிறகு சிறந்த சர்வீஸ் வசதி அளிக்கப்படும்.



DEEP WELL JET PUMPS

卐

**சுகுண ஏஜென்சீஸ்**

160, லிங்கி செட்டி தெரு, சென்னை-600 001

போன் : 25558




பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ. கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாம் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/– மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**D–76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்–612 001.**

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.

**இவர்தான் முதல்வர்:**

# ப. சிதம்பரம்: இளமைச் சுறுசுறுப்பு + அறிவின் முதிர்ச்சி

**நா**ம் ஒரு முதல்வரிடமிருந்து எதிர் பார்ப்பது என்ன? அவர் தம் மாநிலத்தைத் தொழில், வர்த்தகத் துறைகளில் முன்னணிக்குக் கொண்டுவர வேண்டும்; வறுமையை ஒழித்து மக்கள் மகிழ்ச்சியோடு வாழ வழிவகை செய்ய வேண்டும்; கல்வித் தரத்தை உயர்த்த வேண்டும். மத்திய அரசோடு நல்லுறவு கொண்டு, மாநிலத்திற்குத் தேவையான திட்டங்களுக்கு ஒப்புதலும், தக்க நிதி ஒதுக்கீடும் பெற வேண்டும். பல மாநிலங்களின் நடுவே தமிழ்நாடு தொழில், பொருளாதார ரீதியில் முன்னணியில் இருக்க வகை செய்ய வேண்டும்.

தக்க ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்து அவரிடம் முதலமைச்சர் பொறுப்பை ஒப்படைத்தால் இவை முடியாத பகற்கனவுகள் அல்ல!

இன்று நம் கண்முன்னே நடமாடும் அரசியல்வாதிகளில் இவையனைத்தையும் சாதிக்கும் வல்லமை பெற்ற ஒரே தலைவர், இன்று மத்திய அரசில் உள்துறை அமைச்சராகப் பணியாற்றும் ப. சிதம்பரம் அவர்களே. அவரிடம் நம்மைக் கவர்வன எவை?

அவர் மெத்தப் படித்த பண்பாளர்; புகழ் பெற்ற ஹார்வார்டு பல்கலைக் கழகத்தில் நிர்வாகத் துறையில் பட்டம் பெற்றவர். மேலை நாட்டின் வியத்தகு முன்னேற்றங்களையும், அவற்றின் அடிப்படைக் காரணங்களையும் கண்ணாரக் கண்டவர். ஒரு புகழ் பெற்ற வழக்கறிஞர். சொல்வதைச் சுற்றி வளைக்காமல், தெள்ளத் தெளிய முன் வைக்கும் நாநயம் பெற்றவர். அத்துடன் நாணயமானவரும் கூட! அவர் இலஞ்ச ஊழலிலோ, அதிகார துஷ்பிரயோகத்திலோ சிக்கினார் என்ற பேச்சு இதுவரை இல்லை. தம் கடந்த கால வாழ்க்கையில் கேள்விக்குறிகளோ அன்றி கேலிக்கிடமளிக்கும் வம்பு, தும்புகளோ ஏதுமின்றித் தலைமைப் பொறுப்புக்கான தூய்மையை முற்றிலும் பிரதிபலிப்பவர்.

மத்திய ஆட்சியில் தமக்குக் கொடுத்த பொறுப்பைத் திறம்பட வகித்து வருபவர். ஓய்வு பெற்ற மத்திய அலுவலர்கள், ஓய்வு ஊதியத்தை உடனுக்குடன் பெறுவதிலும், உயர் அதிகாரிகளுக்கு வேலைக்கு ஏற்ற பயிற்சியை வழங்குவதிலும் சில பாராட்டத் தக்க சீர்திருத்தங்களைச் செய்தவர்.

வெற்று சினிமாக் கவர்ச்சியாலோ, இரக்க உணர்வாலோ, அதிகார மமதையாலோ, அன்றி, பணவலிமையாலோ மக்களைக் கவராமல், இளமை பொருந்திய தம் எளிய தோற்றத்தால் அவர்களிடையே தமக்கென ஓர் இடம் பிடித்தவர். வெளிநாட்டுப் போலி நாகரிகத்தால் மாறுமல் இன்றும் வெள்ளை வேட்டியுடன் வலம் வருபவர்.

மத்தியில் உள்ள ஆளுங்கட்சியைச் சேர்ந்தவர். பிரதமர் ராஜீவின் நல்லெண்ணத்தைப் பெற்றவர். இதனால் தமிழ்நாட்டிற்கு ஒரு நிரந்தரமான ஆட்சியைக் கொடுக்க வல்ல திறன் பெற்றவர். திட்டமிட்டுத் திறம்பட உழைத்து, ஆக்கப் பணிகளுக்கு



முதன்மை கொடுத்து, தம் மாநிலத்தின் முன்னேற்றத்திற்காகப் பெற வேண்டியதைப் பெறும் பாங்கு பெற்றவர். இளமையும், சுறுசுறுப்பும், அதே சமயத்தில் அரசியல் முதிர்ச்சியும், ஆழ்ந்த அறிவும் பெற்றவர்.

இத்தனை அடிப்படைத் தகுதிகளையும் பெற்ற ப. சிதம்பரம்தான், இருபதாண்டுகளுக்கும் மேலான கழக ஆட்சியால் நலிவும், சிதைவும் பெற்று, வறுமைக் கோட்டின் கீழே தள்ளப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருக்கும் தமிழ்நாட்டைத் தலைநிமிர்ந்து நடக்க வைக்கக் கூடிய ஒரே நம்பிக்கை நட்சத்திரம்!

**—இ. ந. முகுந்த், பம்பாய் — 38.**



# கருணை கோரும் மனநோய்க் குற்றங்கள்!

ராமன் ராகவ் என்ற ஆயுள் தண்டனைக் கைதி உடல்நலக் குறைவால் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுச் சமீபத்தில் காலமானார். ராமன் ராகவ் ஒரு மனநோயாளி, மிகக் குரூரமான முறையில் பல கொலைகளை ஒன்றன்பின் ஒன்றாகச் செய்து, பம்பாய் நகரத்தை ஒரு கலக்குக் கலக்கியவர்.

ராமன் ராகவ் ஓர் அதீத மனநோய் கொண்ட அபூர்வமான, ஆனால் மிக ஆபத்தான பேர்வழி. ஆனால் இவரைவிடக் குறைவான குற்றங்களைச் செய்கிற எத்தனையோ மன நோயாளிகள் இருக்கிறார்கள். அவர்கள் மனநோயாளிகள் என்பது அவர்களுக்கேகூடத் தெரியாது. புற உலகுக்கும் புரியாது. குற்றவாளிகளாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்படுவார்கள். மனநோய்தான் குற்றங்களைச் செய்யத் தூண்டியிருக்கிறது என்பது சில சமயம் உணரப்படாமலே கூடப் போய்விடும்! இத்தகைய நோயாளிகள்மீது வழக்குத் தொடரப்பட்டால் அவர்கள் விசாரணையை எப்படிச் சந்திப்பார்கள்? விசாரணையில் என்ன கூறப்படுகிறது என்று நன்றாகப் புரிந்து கொண்டு அதில் சரியான முறையில் அவர்களால் பங்கேற்க முடியுமா? முடியாது எனில் இவர்களுக்கு நியாயம் கிடைத்ததாகச் சொல்ல இயலுமா?

இவ்விஷயத்தில் இந்தியாவில் இதுவரை தோன்றாத ஒரு புதிய சிந்தனையும் கண்ணோட்டமும் அமெரிக்காவில் தோன்றியுள்ளன — மனநோயாளிகள் ஏதேனும் குற்றம் இழைத்ததற்காகக் கைது செய்யப்பட்டால், அவர்களை விசாரணைக்கு உட்படுத்துவதற்கு முன், அந்த விசாரணையைச் சந்திக்க அவர்கள் உடலளவிலும், மனத்தளவிலும் தகுதியுடையவர்களாக இருக்கிறார்களா என்று ஆராயப்படுகிறது. தகுதியற்றவர்களுக்குத் தகுந்த சிகிச்சை அளிக்கப்பட்டு, அவர்கள் மெள்ள விசாரணைக்குத் தயார்ப்படுத்தப்படு

கின்றனர். இதனை Forensic Psychology என்று அழைக்கின்றனர்.

நியூயார்க்கில் உள்ள கெர்பி ஃபொரன்ஸிக் சைக்கியாட்ரி நிலையத்தில் மனநோயாளிகளைப் பரிசோதித்து விசாரணைக்குத் தயார் படுத்துவதில் பயிற்சி பெற்ற ஸ்ரீகலாவைச் சந்தித்த போது அவர் தமது அனுபவங்களைக் கூறினார்:

"ஒரு குற்றத்தின் பேரில் கைது செய்யப் படுபவர் மனநோயாளியாக இருக்கக் கூடும் என்ற சந்தேகம் தோன்றினால் உடனே இரண்டு மருத்துவர்களை வரவழைத்து அவரை ஆராயச் செய்து அவர் மனநிலை குறித்து விரிவான அறிக்கைகள் பெறப் படும். அவருக்கு விசேஷ உதவி தேவை என்று கருத இடமிருந்தால் கெர்பி போன்ற ஃபொரன்ஸிக் சைக்கியாட்ரி மையத்திற்கு அவர் அனுப்பப்படுகிறார்.

"அங்கு ஓர் அமைதியான சூழ்நிலையில் மருத்துவர்கள், செவிலியர்கள், உதவியாளர்கள் மற்றும் 'தெராபிஸ்ட்' எனப்படும் சிகிச்சையாளர்களின் துணையுடன் ஒரு நோயாளியால் அமைதியாகச் சிந்திக்க முடிகிறது. கட்டுக்காவலில் வைக்கப்பட்டாலும் ஒரு சிறைச் சாலையில் இருப்பது போன்ற உணர்வும் பயமும் இங்கு ஏற்படுவதற்கான வாய்ப்புகள் குறைவு. கெர்பி பணியாளர்கள் அனைவருமே நோயாளி நலம்பெறவேண்டும் என்ற நோக்குடன் அவரை அணுகுவதால் அவருக்குத் தன்னம்பிக்கை ஏற்படுகிறது. தமக்கு ஒரு மன நோய் இருப்பதை அந்நோயாளிக்குப் புரிய வைத்து, நோயை வெல்ல அவருக்கு உதவுவது முதல் கட்டம். இரண்டாவது, வழக்கறிஞருடன் அவரை ஒத்துழைக்கச் செய்து, அவர் மீது என்ன குற்றங்கள் சாட்டப்பட்டுள்ளன, அவற்றுக்கான தண்டனை என்னவாக இருக்கக் கூடும், என்பதை விளக்குவது, மூன்றாவதாக வழக்காடு மன்றம், அதன் நடை முறைகள், அங்கு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லித் தருவது.

"இந்தச் சிகிச்சை அளிக்க, சட்டப்படி மூன்று மாத அவகாசம் வழங்குவார்கள். அதற்கு முன்னரே நோயாளி தயாராகிவிட்டால் நீதிமன்றத்திற்கு அழைத்துச் செல்லப்படுவார். தேவைப்பட்டால் மூன்று மாதங்களுக்கு மேலும் சிகிச்சை நீடிக்கலாம்.

"இந்தப் பணி மிகக் கடினமானதாக இருக்குமே?" என்றோம் ஸ்ரீகலாவிடம்.

"கடினம்தான்!" என்றார் அவர். "குற்றத்தை மறுப்பதுதான் நோயாளியின் முதல் செயலாக இருக்கும். பல நோயாளிகள் வன்முறைக்குத் துணிவார்கள். இது போன்ற சமயங்களில் சிகிச்சை தரும் டாக்டர்களும், நர்ஸ்களும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளச் சில தற்காப்பு முறைகளைத் தெரிந்து வைத்திருப்பதோடு அபாய அறிவிப்பு ஒலித்ததும் உதவுவதற்கு ஆங்காங்கே சிறப்புப் பயிற்சி பெற்ற, ஆயுதமேந்திய காவலர்களும் இருப்பார்கள். நகைச்சுவை உணர்வோடு அணுகினால் சிலர் நன்றாக ஒத்துழைப்பார்கள், வேறு சிலர் அன்பான அணுகுமுறைக்குத்தான் கட்டுப்படுவார்கள். மேலும் சிலரை மிரட்டித்தான் வழிக்குக் கொண்டுவர வேண்டியிருக்கும். முதலில் நோயாளி நம்மை நண்பராக அங்கீகரிக்க வேண்டும். நட்புணர்வு ஓர் எல்லைக் கோட்டைத் தாண்டி உணர்ச்சிபூர்வமான உறவாகி விடாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு நோயாளி ஆரம்பத்தில் மிகவும் கடுமையாக நடந்து கொண்டாலும் பொறுமையைக் கடைப்பிடித்ததால் அவர் மிகவும் மாறிப் போனார். 'ஏகப்பட்ட வேகமான டிராஃபிக். தெருவில் நடந்து செல்லும் போது ஜாக்கிரதையாக இரு!' என்று கவலையுடன், உண்மையான அக்கறையுடன் எனக்கு அறிவுரை கூறினார்."

"சிகிச்சை முறையை இன்னும் சிறிது விளக்கமாகக் கூற முடியுமா?"



• ஸ்ரீகலா

''ஆரம்பத்தில் ஐ. கியூ டெஸ்டுகள் மூலம் நோயாளியின் அறிவுத் திறன் கணிக்கப்படுகிறது. பிறகு சில மனோதத்துவ ரீதியதான பரிசோதனைகள் செய்யப்படுகின்றன. நோயாளியை ஒரு மனித உருவத்தை வரையச் சொல்லுவோம். அவர் வரையும் உருவத்தைக் கொண்டு அவர் மனநிலை கணிக்கப்படும். மிகப் பெரிய வாயும், பற்களும்உடையஉருவத்தைவரைந்தால்நோயாளி மிகவும் முரட்டு சுபாவம் உள்ளவர் என்று கணிக்கலாம். கண்களுக்குப் பதில் சிலர் வெறும் துளைகளை வரைவார்கள் — இவர்கள் மிகவும் மனம் நொந்துபோய் உணர்ச்சியற்றவர்களாகி விட்டார்கள் எனக் கொள்ளலாம். கண்ணில்லாத உருவங்களை வரைபவர்கள் பெரும்பாலும் schizophrenia எனப்படும் மனச்சிதைவு நோயால் பாதிக்கப்பட்டவர்கள். 'பிளாட் டெஸ்ட்' என்றும் ஒரு பரிசோதனை உண்டு. சிறிது மையை ஒரு பிளாட்டிங் பேப்பரில் உதறித் தேய்த்து ஒரு 'டிசைனை' உருவாக்கி அது எதை நினைவூட்டுகிறது என்று நோயாளியைக் கேட்பது. அவர்கள் கூறும் பதில்கள் மூலம் அவர்களுடைய ஆழ்மனத்தின் உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் உணர்ந்து, என்ன பாதிப்பினால் அவர்களுக்கு மனநோய் ஏற்பட்டுள்ளது என்று கண்டறிந்து, தக்க மருந்துகளையும், மனோதத்துவ சிகிச்சை முறைகளையும் அளிக்க வேண்டும்.''

''மனநோயாளிகள் உருவாகவும், அவர்கள் குற்றவாளிகளாகவும் என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?''

''அமெரிக்காவைப் பொறுத்தமட்டில் மதுவுக்கும், போதை மருந்துகளுக்கும் அடிமைப்படுதல், குடும்ப வாழ்வின் சீர்குலைவு ஆகியவை முக்கிய காரணங்கள். மற்றோர் அதிர்ச்சிதரும் காரணமும் இருக்கிறது: பல அமெரிக்கக் குழந்தைகள் மன விகாரங்களையுடைய பெரியவர்களால் தகாத உடலுறவுச் செயல்களில் ஈடுபடுத்தப்படுகின்றனர். இது சொல்லொணாத பாதிப்பை அவர்களிடம் ஏற்படுத்துகிறது — மனநோயாளிகளுள் குற்றவாளிகளாய் இருக்கும் பலர் இத்தகைய கொடுமைக்கு உள்ளானவர்களே.

— ஸ்ரீகலா இவ்வாறு சொன்னபோது சோகம் நெஞ்சைக் கவ்வியது. கஞ்சா, அபின் போன்ற போதைப் பொருள்களுக்கு அடிமையாகும் பழக்கம் இந்தியர்களிடமும், குறிப்பாக மாணவர் சமுதாயத்தினிடம் அதிகரித்து வருவதை எண்ணிய போது கதிகலங்கியது.

பேட்டி: **எஸ்ஸார்**

வண்ணப்படம்: **கே. வி. ஏ.**

''நகச்சுத்தி... பேனா பிடிச்சு எழுத முடியாது... எங்கம்மாவுக்கு லெட்டர் சொல்றேன். எழுதிக் கொடுங்க...''





''என் பொம்முக்குட்டி அம்மாவுக்கு'ன்னு ஆரம்பிச்சேன்... மீதியைச் சொல்லு...''



''என்னங்க, சொல்ல ஆரம்பிக்கு முன்பே எழுத ஆரம்பிச்சுட்டீங்க?''

''நீ அந்தப் 'பிரைவேட் டிடெக்டிவ்' கம்பெனியிலே வேலைக்கு இண்டர்வியூவுக்குப் போனியே, என்ன கேட்டாங்க?''

''ஜானகி அணி—ஜெயலலிதா அணி—இவற்றில் எது உண்மையான அ. இ. அ. தி. மு. க. அணி'ன்னு கேட்டாங்க. நான், 'உங்க வேலையும் வேண்டாம், குழப்பமும் வேண்டாம்'னு ஓடி வந்துட்டேன்!''

— எஸ். ராகவேந்திரா.





''உங்க கதையைக் காப்பியடிச்சு வேறு ஒரு எழுத்தாளர் பேரிலே வந்திருக்கே... புகார் பண்ணலியா?''

''எப்படி சார் புகார் பண்ணுவேன்? அவர் ஒரிஜினலையே காப்பியடிச்சு எழுதியிருக்கலாமில்லையா?''

— நாகை பாபு.

ஹா!!!

# புதிய ஸிபாகா டாப் டூத்பேஸ்ட்...
# ஒவ்வொரு சுவாசமும் புத்துணர்ச்சிமயம்.

super fresh
Cibaca Top
toothpaste
improved taste & foam

முன்னையினும் சிறந்த சுவை அதிக நுரை

ஸிபாகா டாப்பில் நன்கு பரவும் விசேஷ பொருள் உண்டு. இது உடனடியாக வாய் முழுதும் பரவி, பற்சிதைவை உண்டாக்கும் நுண்கிருமிகளை அழித்து, வாய் துர்நாற்றத்தைத் தடுக்கிறது: உங்கள் வாயையும், பற்களையும் துப்புரவாக சுத்தம் செய்யும் போதே, உங்கள் சுவாசத்திற்கு முழுமையான புத்துணர்ச்சியையும் தருகிறது.

**சுவாசத்தின் புத்துணர்ச்சியை சோதித்துப் பாருங்கள் இப்படி... ஹா! ஸூப்பர் ஃப்ரெஷ்ஷ்... ஸிபாகா டூத்பேஸ்ட்.**



**முழுமையான புத்துணர்ச்சி**
**வாய்க்கு முழுப் பாதுகாப்பு**

## ஸிபாகா டாப்
டூத்பேஸ்ட்

இந்துஸ்தான் ஸிபா காய்கியின் தரமிக்க தயாரிப்பு.

RCA/CT/141/88-TM-1



வந்த வேலையை விட்டுவிட்டு வம்பில் மாட்டிக் கொண்டோமோ என்று முதலில் கொஞ்சம் யோசனையாகத்தான் இருந்தது கணேசனுக்கு. ஆனால் இதில் தலையிடுவதில் தனக்குத் தார்மீகப் பொறுப்பு இருப்பதாக அறிவு அடித்துப் பேசவே, தயக்கம் தரை தட்டியது.

வாஸ்தவத்தில் பூச்சவேலை பாக்கி நிற்கும் அவனுடைய புது வீட்டுக்குப் பணம் புரட்டவே இங்கே வந்திருந்தான். எதிர்பார்த்த இடத்தில் கொஞ்சம் இழுபறி என்று தெரிந்ததும் மைத்துனனின் ஞாபகம் வந்தது. பெரிய கம்பெனி ஒன்றில் வேலையாய் இருந்த அவனுக்கு, மாதாந்திரச் சீட்டு, லேவாதேவி போன்றவற்றில் பரிச்சயம் இருந்ததால் இந்தப் 'புரட்டல்' விவகாரத்தில் புலியாய் இருந்தான். மனைவி வேறு தன் அண்ணனின் அசகாய சூரத்தனத்தில் அதிக நம்பிக்கை வைத்துக் கணேசனைக் கிளப்பி இருந்தாள்.

வீட்டுக்குள் நுழையும்போதே வித்தியாசத்தை மோப்பம் பிடித்துவிட்டான் கணேசன். முகம் மலர வரவேற்பதில் யாருக்கும் 'மூடு' இல்லை. மாலை போடப்பட்டிருந்த மாமனாரின் படத்துக்குக் கீழே மூலையில் சுருண்டு படுத்திருந்தார் மாமியார்.

இறங்க அடம்பிடித்துக் கொண்டிருந்த குழந்தையை இடுப்பிலேயே ஒட்டிக் கொண்டு, அதுதான் இப்போதைய முக்கியமான வேலை என்பது போல் முகத்தை ஸீரியஸாய் வைத்துக் கொண்டு, சிரத்தை இன்றிச் சிரித்தாள் மைத்துனனின் மனைவி.

கணேசன் வரும்போதெல்லாம் ஆத்மார்த்தமான சந்தோஷத்துடன் வரவேற்கும் மைத்துனி, இப்போது முகத்தில் கரியை அப்பிக் கொண்டு பாத்திரம் கழுவிக் கொண்டிருந்தாள்.

இவன் உள்ளே போய் உட்கார்ந்ததும் சுருட்டிக் கொண்டு எழுந்த மாமியார், ''வாங்க'' என்று முனகினாள்.

''என்ன அத்தை! உடம்பு சௌகரியமில்லையா என்ன?''

''ம்க்கும். அப்பிடி இப்பிடின்னு வந்து ஒரேயடியாப் போய்ச் சேர்ந்துட்டாத்தான் தேவலையே... இந்த வூட்லே இப்படி லோல் படறதுக்கு ஒரு வாய் விஷத்தைக் குடிச்சுட்டு நிம்மதியாக் கண்ணை மூடி......''

அதற்குமேல் வார்த்தை கிளம்பாமல் வாயை அடைத்துக் கொண்டு மாமியார் குலுங்கி அழவும், ஓசைப்படாமல் உள்ளே வந்திருந்த மைத்துனி, ''நீ ஏம்மா அழறே! இவங்க சோத்துக்காக இங்கே யாரும் வீங்கிக் கிட்டு இருக்கலே! ராத்திரிக்கு அண்ணன் வரட்டும்! ரெண்டுல ஒண்ணு கேட்டுடறேன்!'' என்றதும் மாமியாரின் அழுகை மாயமாகி மூக்குறிஞ்சல் மட்டும் மிஞ்சியது. தொடர்ந்து திடீரென ரௌத்ரம் பொங்க மைத்துனி மீது பாய்ந்தாள்.

''வாயை மூடுடி! நாளைக்கு இன்னொரு இடத்துக்குப் போறவ, சரிக்குச் சரி எதுத்து நின்னு ஆச்சா! இவளுக்கு ஒரு நல்ல வழி வாய்க்கணும்னுதானே நான் வாயடைச்சுக்

# வாசல் படி

ஜெரா



கிடக்கிறேன். இல்லேன்னு இந்த மானங்கெட்டப் பொழப்புக்கு என்னிக்கோ கயித்தை மாட்டிக்கிட்டி ருப்பேன்.''

''ஆமா.... ஆ ஊன்னு என்னே இழுத்துடுங்க..''

மைத்துனி அழுகைக்கு ஆயத்தமாக, கணேசனுக்குச் சங்கடம் வாட்டியது.

''த்தா... அழுவாதே... என்னதான் நடந்தது அத்தே...?''

**கொ**ஞ்சம் விசாலமாய்ப் பார்த்தால் ஒன்றுமே இல்லேதான். ஆனால் மகனைத் தக்க வைத்துக் கொள்ளத் தாயும், கணவனே ஈர்த்துக் கொள்ள மனைவியும், அண்ணனே அன்பில் வீழ்த்த தங்கையுமாக மூன்று பெண்கள் போட்டி போடும் இடத்தில் பொசுக்கென்று ஒரும்கூட பொல்லாப்பாய் வெடித்து விடுகிறது.

மைத்துனருக்கு வீட்டிலிருந்து நாற்பது மைல் தள்ளி வேலே. வாரத்துக்கு ஒரு தடவைதான் வீட்டுக்கு வரு வான். அவன் மனைவியோ பக்கத்திலேயே பத்துமைல் வட்டாரத்துக்குள் இருந்த பஸ் கம்பெனி ஒன்றிற்கு டைப் அடிக்கப் போய்க் கொண்டிருந்தாள். வீட்டு நிர்வாகம் முழுவதும் மாமியார் கையில்தான் இருந் தது.

வழக்கம்போல இந்த மாதச் சம்பளத்தை மருமகள் கவர் பிரிக்காமல் கொண்டு வந்து தருவாள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்க, அவளோ குழந்தைக்கு ஃபேஸ் க்ரீம், பவுடர் அது இது என்று தூள் கிளப்பிக் கொண்டிருக்க, மாமியாருக்கு வந்ததே கோபம்!

பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு மாமியார் கேட்க, மருமகள் சர்வ அலட்சியமாக, சம்பளப் பணம் முழுமையும் போன வாரமே கணவன் வாங்கிக் கொண்டு போய்விட்டதாகச் சொல்ல, சின்னப்

பொறி சிலும்பிக் கொண்டு பெருந்தீயாகிப் போனது.

மகனும், மருமகளும் தன்னை உதாசீனப் படுத்திவிட்டார்கள் என்ற வேண்டாத கற்பனையை வளர்த்துக் கொண்டு, ஏற்கெனவே மருமகள் செய்திருந்த குட்டித் தவறுகளுக்கெல்லாம் உருவம் ஒட்ட வைத்து மாமியார் குதிக்க, மாமியாரை மட்டம் தட்டக் காத்திருந்த மருமகள் தலையால் நடக்க, அண்ணைக்கு ஆதரவாய் மைத்துனி மத்தளம் கொட்ட, குடும்பத்துக்குள் பரதநாட்டியமும், பாட்டுக் கச்சேரியும் களைகட்ட ஆரம்பித்து விட்டன.

கணேசனுக்கு வேதனையாய் இருந்தது. இதைப் போன்ற உரசல்களை ஏற்கெனவே அவன் பார்த்திருந்தாலும்கூட, இந்தத் தடவை எல்லாமே எல்லை கடந்து விட்டதைப் போல் உணர்ந்தான். சென்ற முறை தடியாய்த் தோற்றமளித்த மைத்துனி இப்போது கைப்பிடிக்குள் அடங்கி விடுமளவுக்குக் கொடியாகி இருந்தாள். மைத்துனனின் மனைவி மகா விரக்தியில் இருந்தாள். மாமியாரின் கன்னம் ஒட்டிப் போய்க் கருவாடாகி இருந்தாள். அதுசரி! சண்டை போடவே நேரம் போதாத போது இவர்களுக்குச் சாப்பிடுவதற்கு நேரம் ஏது?

ஒவ்வொருவரிடமும் தனித் தனியாய்ப் பேசிப் பார்த்ததில் பலனில்லை. அவரவர் தத்தம் பிடிவாதத்தையே பெரிதாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனர்.

எல்லாம் இருந்தும் அனுபவிக்க முடியாமல் ஒன்றாய்ச் சேர்ந்திருந்து ஒருவருக்கொருவர் குடுமியைப் பிடித்துக் கொள்வதைவிட, ஒன்றி இருப்பதாக வெளியில் காட்டிக் கொண்டு உள்ளுக்குள் உதைபட்டுக் கொள்வதைவிட, தனித்தனி அடுப்பெரிவது அப்படி ஒன்றும் தவறான விஷயமல்ல என்று பட்டது கணேசனுக்கு! மாமியாரிடம் சொன்னான்:

மாமியார் கையெடுத்துக் கும்பிட்டாள்.

''தாராளமா நீங்களே அவன்கிட்டே பேசி, தனிக்குடித்தனத்திற்கு ஏற்பாடு பண்ணிட்டுப் போங்க. எனக்குப் பூரண சம்மதம். அவன் மவராசனாய் இருக்கட்டும். நாங்க மண்ணு தூக்கியாவது பொழைச்சுக்குவோம்.''

மைத்துனியும் மந்தகாசப் புன்னகையோடு கண்களினால் கெஞ்சினாள். கணேசனுக்குப் புதிய பலம் வந்ததைப் போலிருந்தது. பண விஷயத்தை மறந்து போய் மைத்துனனின் வரவுக்காகப் பரபரத்தான்.

வானத்தில் புகையை ஊதியபடி கணேசன் சொன்னதை எல்லாம் கேட்ட மைத்துனன் முதலில் மறுத்தாலும், பிறகு மௌனம் சாதித்தான். அது சம்மதம் என்று பொருள் படவே, கணேசன் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டு, அடுத்த வாரம் வந்து உட்கார்ந்து பேசி, ஒரு நல்ல முடிவு எடுப்பதாக இரு தரப்பினருக்கும் வாக்குறுதி அளித்துவிட்டுத் தொகுதி எம். எல். ஏ. போல காணாமல் போனான்.

ஊருக்குப் போனதும், எல்லாவற்றையும் விலாவாரியாகக் கேட்ட கணேசனின் மனைவி, இவன்தான் அந்தக் குடும்பத்தை வாழ்விக்க வந்த வள்ளல் பெருமான் என்பதாக முடிவு செய்து கொண்டு, இரண்டு நாட்கள் முன்னதாகவே இவனை அனுப்பி வைத்து, 'இரண்டில் ஒன்று' பார்த்துவிட்டு வரும்படி ஆசியும் வழங்கி விட்டாள்.

இந்தமுறை கணேசன் வீட்டுக்குள் நுழையும் போது எல்லாவற்றையும் சரி செய்யப் பலமான திட்டத்தோடுதான் நுழைந்தான். வாசல்படி தடுக்கி விழ இருந்தவன், சமாளித்துக் கொண்டு உள்ளே பார்த்தபோது உலக அதிசயத்தைக் கண்டான்.

பாயில் படுத்து மாமியார் விச்ராந்தியாய்க் கண்களை மூடி டி வி யின் ஒலியில் பொழிந்து கொண்டிருந்த இசை மழையில் நனைந்து கொண்டிருக்க, மைத்துனனின் மனைவி அவருடைய கால்களை இதமாக அமுக்கிக் கொண்டிருந்தாள்.

அண்ணியை, 'அடங்காப்பிடாரி' என்று அடிக்கடி வர்ணிக்கும் மைத்துனி, அன்பாய், காப்பி ஆற்றி, டம்ளரை அவளிடம் நீட்டிக் கொண்டிருந்தாள். ''நீ சாப்பிட்டாச்சா?'' என்று அண்ணி அன்பொழுகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

வெறுப்பால் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளாமல் மூலைக்கொருவராய் முடங்கிக் கொண்டிருப்பார்கள் என்று எதிர் பார்த்திருந்த கணேசனுக்குச் செருப்பால் அடித்தது போலிருந்தது. அப்படியானால்... அப்படியானால்... இவர்கள் உலக யுத்தம் போல ஒருவருக்கொருவர் உதைத்துக்கொள்வது எல்லாம் வெறும் ஊடல்தானா? எப்படியோ காலம் தள்ள வேண்டிய கட்டாயம் இவர்களைக் கைகுலுக்கிக் கொள்ள வைக்கிறதோ!

கணேசனின் பிரவேசம் அன்று, அங்கு யாருக்கும் அப்படி ஒன்றும் பிரமாதமாகப் படவில்லை. மாலையில் வந்த மைத்துனன் கூட அவனிடம் சரியாக முகம் கொடுத்துப் பேசவில்லை. இந்தக் குடும்பத்தின் ஒற்றுமையைக் குலைக்கச் சதி செய்து, தனிக்குடித்தனம் அது இது என்று அக்கம்பக்கத்தில் சிலர் ஐந்தாம் படை வேலை செய்வதாக மாமியார் ஜாடையாகக் கணேசனைத் தாக்கிப் பேசினாள்.

ரொம்ப சீக்கிரம் கணேசன் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தபோது, மீண்டும் வாசல்படி தடுக்க இருந்து, தப்பித்துக் கொண்டான். எல்லா வீட்டிலும் வாசல்படி இப்படித்தான் இருக்கும் என்பதும், நுழைபவர் மட்டுமே நெளிவு சுளிவு தெரிந்து நுழைய வேண்டும் என்பதும் கணேசனுக்குக் காலம் கடந்து புரிந்தது.

---



''இப்போ நான் காதலிக்கிற பொண்ணையே திருமணம் பண்ணிக்குவேனா, அல்லது, அவளோட தோழியைத் திருமணம் செய்து கொள்வேனான்னு கொஞ்சம் பார்த்துச் சொல்லுங்க, ஜோஸியரே...!'' —கடுவெல் கோபால்சாமி.



# புதிய ஸெரிலாக் ஆரஞ்சு




## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி

இதோ உங்கள் குழந்தைக்கு இன்னுமோர் அனுகூலம்-புதிய ஸெரிலாக் ஆரஞ்சு. வளரும் ருசிக்கேற்ப உணவில் ஒரு மாறுதல் அளிப்பதோடு, அவனுக்கு ஆரஞ்சின் நன்மைகளேயும் தருகிறது. நீங்கள் ஸெரிலாக் ஆரஞ்சு கொடுக்கும் பொழுது குழந்தைக்கு முழுமையான போஷாக்கு, நற்சுவை மற்றும் நொடிப் பொழுதில் தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் தொடர்ந்து கிடைக்கின்றன. நான்கு மாதங்களிலிருந்து பால் உணவுடன் கூட ஸெரிலாக்-வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்/புதிய ஸெரிலாக்-ஆரஞ்சு கொடுங்கள். மூன்று இனிய வழிகளில் ஸெரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளியுங்கள்.

சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.







R.K. SWAMY/FSL/4974-TAM



# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை

**சக்கரா டீ**






**டாட்டா டீ லிமிடெட்**

உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 13

## விஷ பாணம்


ந்த இடத்தில், அந்த நேரத்தில், தேவராளனைப் பார்த்ததும், *வந்தியத்தேவனுடைய உள்ளம் சிறிது துணுக்குற்றது. கடம்பூர் அரண்மனையில் தேவராளன் வெறியாட்டம் ஆடியதும் அப்போது அவன் கூறிய மொழிகளும் நினைவு வந்தன. நடுக்கடலில் சுழற்காற்று குமுறிக் கொண்டிருந்த வேளையில் ரவிதாஸனும், தேவராளனும் சொன்ன செய்திகளும் ஞாபகத்துக்கு வந்தன. அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்று கண்டுபிடிப்பது கடினம். ஆனாலும் அவர்கள் ஏதோ ஒரு மர்ம பயங்கரமான சதிச் செயலில் ஈடுபட்டவர்கள் என்பது நிச்சயம். அவர்களில் ஒருவனிடம் இச்சமயம், அதுவும் இந்த நிர்மானுஷ்யமான இடத்தில், அகப்பட்டுக் கொண்டோமே என்று நினைத்தான். அவனிடமிருந்து தப்பிக் குதிரையை வேகமாகத் தட்டிவிட்டுக் கொண்டு போய் விடலாமா என்று ஒரு கணம் எண்ணினான். அந்த எண்ணத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான். தூரத்தில் தீயின் வெளிச்சம் தெரிந்தது. அது சுடுகாடாய்த்தான் இருக்க

அமரர் கல்கி

வேண்டும். ஏதோ ஒரு மண்ணுடல் தீக்கிரையாகிக் கொண்டிருக்கிறது. அந்த மண்ணுடலில் உயிர் இருந்த காலத்தில் எத்தனை எத்தனை ஆசாபாசங்களால் அது அலைப்புண்டிருக்கும்? எத்தனை இன்ப துன்பங்களை அது அனுபவித்திருக்கும்! — அரை நாழிகை நேரத்தில் மிச்சம் இருக்கப் போவது ஒரு பிடி சாம்பல்தான்! உலகில் பிறந்தவர்கள் எல்லாரும் ஒரு நாள் அடைய வேண்டிய கதி அதுவேதான். மன்னாதி மன்னர்களும் சரி, ஏழைப் பிச்சைக்காரனும் சரி, ஒரு நாள் அக்கினிக்கு இரையாகிப் பிடி சாம்பராகப் போக வேண்டியவர்களே!

திகில் வந்தது போலவே திடீரென்று விட்டுப் போய்விட்டது. இந்த வேஷ வஞ்சகக்காரனுக்குப் பயந்து எதற்கு ஓடவேண்டும்? ஏதோ இவன் சொல்லுவதற்குத்தான் வந்திருக்கிறான். அதைக் கேட்டு வைக்கலாமே? ஒருவேளை, கொல்லன் உலைக்களத்தில் தான் நுழைந்த போது அங்கிருந்து பின்பக்கம் சென்று மறைந்து கொண்டவன் இவன்தான் போலும்! அந்த அதிசயமான வாள்கூட இவனுடையதாக இருக்கலாம். அதன் கைப்பிடியின் அருகில் மீனின் சித்திரம் இருந்ததல்லவா? இவனுடன் கொஞ்சம் பேச்சுக் கொடுத்தால் புதிய செய்தி ஏதேனும் தெரிய வரக்கூடும்?

ஆகையால் குதிரையை மெதுவாகவே செலுத்தினான் வல்லவரையன். முதன் முதலில் புதிது புதிதாக லாடம் அடிக்கப் பெற்ற அந்தக் குதிரையும் நடப்பதற்குக் கொஞ்சம் கஷ்டப்பட்டதாகத் தோன்றியது. அதை விரட்டியடிக்க மனம் வரவில்லை.

''இங்கே எப்படி அப்பா திடுதிப்பென்று வந்து முளைத்தாய்!'' என்று கேட்டான் வல்லவரையன்.

''நான் அல்லவா அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்? உன்னை நடுக்கடலில் கப்பல் பாய்மரத்தோடு கட்டிவிட்டு வந்தோமே, எப்படி நீ தப்பி வந்தாய்!'' என்றான் தேவராளன்.

''உனக்குமட்டும்தான் மந்திரம்தெரியும் என்று நினைத்தாயோ? எனக்கும் கொஞ்சம் தெரியும்!''

''மந்திரத்தில் உனக்கு நம்பிக்கை ஏற்பட்டது பற்றி எனக்கு மகிழ்ச்சி. என்னுடைய மந்திர சக்தியினால் நீ இங்கே தனியாகப் போய்க் கொண்டிருப்பாய் என்று நானும் அறிந்து கொண்டேன். அதனால்தான் நான் முன்னால் வந்து காத்திருந்தேன்.''

''ஏன் காத்திருந்தாய்? என்னிடம் உனக்கு என்ன காரியம்?''

''நீயே யோசித்துப் பார்! அல்லது மந்திர சக்தியினால் கண்டுபிடி!''

''உங்களுடைய இரகசியங்களை நடுக்கடலில் என்னிடம் நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்பதும் எனக்குத் தெரியாது. ஆனாலும் அந்த இரகசியங்களை நான் மறந்துவிடத் தீர்மானித்துவிட்டேன். யாரிடமும் சொல்லப் போவதில்லை...''

''அதைப் பற்றி நானும் கவலைப்படவில்லை. எப்போது நீ அந்த இரகசியங்களை யாரிடமாவது சொல்லலாம் என்று நினைக்கிறாயோ, அப்போது உன் நாக்குதுண்டிக்கப்படும். நீ ஊமையாவாய்!''

வந்தியத்தேவனுக்கு உடல் சிலிர்த்தது. தஞ்சையிலும் இலங்கையிலும் அவன் சந்தித்த ஊமைப் பெண்களைப் பற்றிய நினைவு வந்தது. சற்று நேரம் சும்மா நடந்தான். இந்தப் பாவி எதற்காக நம்மைத் தொடர்ந்து வருகிறான்? இவனிடமிருந்து தப்பிச் செல்லுவதற்கு என்ன வழி? கோடிக்கரையிலிருந்தது போல் இங்கேயும் சேற்றுப் பள்ளம் இருந்தால் எவ்வளவு உபயோகமாயிருந்திருக்கும்? அல்லது ஆற்றில் பிடித்துத் தள்ளி விட்டுப் போகலாமா? அதில் பயனில்லை. ஆற்றில் தண்ணீர் அதிகம் கிடையாது. வேறு வழி ஒன்றும் இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது, உடைவாள். அதை எடுக்க வேண்டியதுதான்.

''தம்பி! நீ என்ன நினைக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அது கைகூடாது. வீண் முயற்சியில் தலையிடாதே!''

வந்தியத்தேவன் பேச்சை மாற்ற

விரும்பினான். அவனிடமிருந்து தப்பு வதற்கு வழி யோசிக்கச் சிறிது சாவ காசம் வேண்டும். அதுவரை ஏதேனும் பேச்சுக் கொடுத்துவர வேண்டும்.

"உன் கூட்டாளி ரவிதாஸன் எங்கே?"

தேவராளன் ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்துவிட்டு, "அது உனக்கல்லவா தெரிய வேண்டும்? ரவிதாஸன் எங்கே?" என்று கேட்டான்.

வந்தியத்தேவன் திடுக்கிட்டான். ரவிதாஸனைப் பற்றிய பேச்சைத் தான் எடுத்திருக்கக் கூடாது; எடுத்தது தவறு. ரவிதாஸனை இவன் பார்த்துப் பேசிவிட்டு நம்மை ஆழம் பார்க்கிறானா? அல்லது...

"என்ன தம்பி, சும்மா இருக்கிறாய்? ரவிதாஸன் எங்கேயென்று சொல்ல மாட்டாயா? போனால் போகட்டும்! அந்த ஓடக்காரப் பெண், பூங்குழலி எங்கே? அதையாவது சொல்."

வந்தியத்தேவன் பாம்பை மிதித்த வன் போல் பதறினான். மேலே பேசு வதற்கே அவனுக்குத் தயக்கமாயிருந் தது.

"அவளைப் பற்றியும் நீ ஒன்றும் சொல்ல மாட்டாயாக்கும். போனால் போகட்டும். அவளை நீ காப்பாற்ற நினைப்பதற்குத் தக்க காரணம் இருக்க லாம். தம்பி! சற்று முன்னால் ஒரு காதல் பாட்டுப் பாடினாயே! அவளை நினைத்துத்தான் பாடினாயா?"

"இல்லை; சத்தியமாய் இல்லை!" என்று வல்லவரையன் பரபரப்போடு கூறினான்.

"ஏன் உனக்கு இவ்வளவு பர பரப்பு? ஏன் இவ்வளவு ஆத்திரம்?"

"சரி, சரி! அதைப் பற்றியெல்லாம் பேசிக் கொண்டிருக்க இப்போது அவ காசம் இல்லை. ஏன் என் குதிரையின் முகக் கயிற்றைப் பிடித்துக் கொண் டிருக்கிறாய்? விட்டுவிடு! நான் போகி றேன். அவசரக் காரியம் இருக் கிறது."

"நான் வந்த காரியத்தை நீ இன்னும் கேட்கவில்லையே?"

"சொன்னால்தானே கேட்கலாம்?"

"இந்த முல்லையாற்றங்கரைக்கு ஓர் அதிசய சக்தி உண்டு. இங்கே யார் எதை விரும்புகிறார்களோ, அது உடனே அவர்களுக்குச் சித்திக்கும்."

"நான் ஒன்றும் விரும்பவில் லையே?"

"அது பொய்! நீ யாரை நினைத்துக் கொண்டு உன் காதல் பாட்டைப் பாடினாயோ அவள் உன்னைப் பார்க்க விரும்புகிறாள். நீ இஷ்டப்பட்டால் பார்க்கலாம்."

"எப்போது?"

"இன்றிரவே பார்க்கலாம்."

"இது என்ன கதை?"

"கதை அல்ல, தம்பி! அதோ பார்!" என்று தேவராளன் சுட்டிக் காட்டினான். அவர்கள் சென்ற வழி யில் சற்றுத் தூரத்தில் ஏதோ ஒரு பொருள் மங்கலாகத் தெரிந்தது. வந் தியத்தேவன் உற்றுப் பார்த்தான். அது ஒரு பல்லக்கு — மூடு பல்லக்கு என்று அறிந்தான்.

ஆகா! அந்தப் பல்லக்கு! எங்கே பார்த்திருக்கிறோம்? ஏன்? பழுவூர் இளைய ராணியின் பல்லக்கு அல்லவா அது? ஒருவேளை அதற்குள்ளே நந்தினி இருக்கிறாளா, என்ன? அதைத் தெரிந்து கொள்ளும் ஆவலை அவனால் கட்டுப்படுத்திக் கொள்ள முடிய வில்லை.

குதிரையை அந்தப் பல்லக்கின் அரு கில் கொண்டு போய் நிறுத்தினான். பனைச் சித்திரம் போட்ட பல்லக்கின் மூடுதிரை தெரிந்தது. திரை அசைவது போலும் இருந்தது.

உடனே வந்தியத்தேவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான்.

அதே கணத்தில் தேவராளன் தொண்டையிலிருந்து ஒரு விசித்திர மான சப்தம் வெளி வந்தது.

அக்கம்பக்கத்திலிருந்த புதர்களின் மறைவிலிருந்து ஏழெட்டுப் பேர் திடும் திடும் என்று எழுந்து பாய்ந்து வந் தார்கள். வந்தியத்தேவன் மீது விழுந் தார்கள். அவனால் மீறி அசையவும் முடியாதபடி பிடித்துக் கொண்டார் கள். கால்களையும் கைகளையும் துணி யினால் கட்டினார்கள். கண்ணையும் ஒரு வன் கட்டினான். உடைவாளை ஒருவன் பலவந்தமாக எடுத்துக் கொண்டான். பிறகு வந்தியத்தேவனை அந்தப் பல் லக்கினுள்ளே தூக்கிப் போட்டார் கள். சிலர் உடனே பல்லக்கைத் தூக் கிக் கொண்டு விரைந்து நடந்தார் கள். மற்றவர்கள் முன்னும் பின்னும்

சென்றார்கள். தேவராளன் முன்னால் வழிகாட்டிக் கொண்டு சென்றான். ஒருவன் குதிரையைப் பிடித்துக் கொண்டு நடந்தான்.


வ்வளவும் அதி விரைவில் நடந்து விட்டன. 'கண் மூடித் திறக்கும் நேரத்தில்' என்று சொல்லுவதும் மிகையாகாது. வந்தியத்தேவன் தன்னைப் பலர் வந்து ஏக காலத்தில் தாக்கியதும் திகைத்துப்போய்விட்டான். அத்தகைய தாக்குதலை அவன் எதிர்பார்க்கவேயில்லை. பல்லக்கில் அவனைத் தூக்கிப் போட்டு, பல்லக்கு நகர ஆரம்பித்த வரையில் அவனால் எதுவும் சிந்திக்கவும்முடியவில்லை. என்ன நடக்கிறதென்று தெரிந்து கொள்ளவும் முடியவில்லை.

ஆனால் பல்லக்கு நகர ஆரம்பித்ததும் சிறிது. சிறிதாக மனம் தெளிவடைந்தது. கண்ணின் கட்டு சுலபமாக நழுவி விட்டது. கட்டியிருந்த கைகளினால் பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு பார்த்தான். நதிக்கரையிலிருந்து குறுக்கே இறங்கிப் பல்லக்கு எங்கேயோ போகிறது என்பதை அறிந்து கொண்டான்.

அவனுடைய கையின் கட்டுக்களையும் காலின் கட்டுக்களையும் அவிழ்த்துக் கொண்டு விடுதலை பெறுவது அவ்வளவு கஷ்டமான காரியம்



எளிதில் மனம் வரவில்லை. இந்தப் பல்லக்கு தன்னை எங்கே கொண்டு போய்ச் சேர்க்கப் போகிறது? நந்தினியிடந்தான் சேர்க்கும் என்று ஊகிப்பதற்குக் காரணங்கள் இருந்தன. அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் இலேசாகத் தலைகாட்டியது. வர வர அது பெரும் ஆர்வமாக வளர்ந்தது. அதற்கு எவ்வளவோ ஆட்சேபங்கள் தோன்றின. ஆட்சேபங்களையெல்லாம் மீறி ஆசை விசுவரூபம் கொண்டது. என்னதான் செய்து விடுவாள் நம்மை? என்னத்துக்காகத்தான் அழைக்கிறாள் என்று பார்த்து விடலாமே? ஏதாவது தெரிந்து கொள்ள முடிந்தால் தெரிந்து கொள்ளலாமே? சூழ்ச்சிக்குச் சூழ்ச்சி செய்யத் தன்னால் முடியாமலா போய்விடும்? மறுபடியும் அவளைப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் கிடைக்குமோ என்பது சந்தேகந்தான். தஞ்சாவூருக்குப் போக வேண்டிய அவசியம் இனி ஏற்படப் போவதில்லை. அங்கே போவதும் அபாயகரம். அதைக் காட்டிலும் வழியிலேயே பார்த்து விடுவது எளிதான காரியம். இன்னும் ஒரு தடவை அவளையும் பார்த்துத்தான் வைக்கலாமே?....

ஆம்; ஆம்! நந்தினியைப் பார்க்க வேண்டும் என்பதற்கு இன்னொர் அவசியமான காரணமும் இருந்தது.

இலங்கையில் அவன் பார்த்த அந்த ஊமை அரசி:—அவள் நந்தினி போலிருந்ததாகத் தான் எண்ணியது சரியா? அதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?

இவ்விதம் வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவன் தலை சுழன்றது. தூக்கம் வருவது போலத் தோன்றியது. இல்லை, இல்லை; இது தூக்கம் இல்லை. பகலிலே தான் அவ்வளவு நேரம் தூங்கியாகி விட்டதே! இது ஏதோ மயக்கம்.

அன்று. பல்லக்கிலிருந்து குதிப்பதும் எளிதாகத்தான் இருக்கும். குதிரையோ பின்னால் வந்து கொண்டிருந்தது. அந்த ஏழெட்டுப் பேரையும் உதறித் தள்ளிவிட்டுக் குதிரை மீது பாய்ந்தேறிச் செல்லுவதும் அவனுக்கு முடியாத காரியமாகாது. அவ்விதம் செய்யலாமா என்று யோசித்தான். ஆனால் ஏதோ ஒன்று குறுக்கே நின்று தடை செய்தது. அந்தப் பல்லக்கினுள்ளே ஓர் அபூர்வமான மணம் சூழ்ந்திருந்தது. அது முதலில் அவனுக்கு உற்சாகத்தை அளித்தது. அதன் கவர்ச்சியிலிருந்து விடுவித்துக் கொண்டு போக

இந்தப் பல்லக்கில் சூழ்ந்துள்ள மணம் தான் இப்படி நம்மை மயக்குகிறது. ஐயோ! இது என்ன பயங்கர அபாயம்! பல்லக்கிலிருந்து குதித்துவிட வேண்டியதுதான்!

வந்தியத்தேவன் கைக்கட்டை அவிழ்த்துக் கொள்ள முயன்றான்: முடியவில்லை. கைகள் அசையவேயில்லை. எழுந்து உட்கார முயன்றான்: அதுவும் முடியவில்லை. கால்களை அடித்துக்கொள்ளப்பார்த்தான்: கால்களும் அசைய மறுத்தன. அவ்வளவுதான்! கண்ணிமைகள் மூடிக் கொண்டன: அறிவு விரைவாக மங்கியது: மயக்கம் அவனை முழுதும் ஆட்கொண்டது.

வந்தியத்தேவன் மயக்கம் தெளிந்து கண் விழித்த போது, பழைய நினைவுகள் வந்து, பல்லக்கிலிருந்து குதிப்பதற்கு முயன்றான். ஆனால் விந்தை! விந்தை! அவன் இப்போது பல்லக்கில் இல்லை! விசாலமான ஓர் அறையில் இருந்தான். அந்த அறை தீபங்களினால் பிரகாசமாக விளங்கிற்று. இங்கேயும் ஏதோ ஒரு மணம் சூழ்ந்து இருந்தது: ஆனால் பழைய மாதிரி மணம் இல்லை. மயக்கம் தரும் மணம் இல்லை. அகிற்புகையின் மணம் போலத் தோன்றியது. முன்னே அவன் அனுபவித்தது அறிவை மயக்கிய மணம். இது அறிவைத் தெளிவு செய்த மணம். படுத்திருந்த ஆசனத்திலேயே எழுந்து உட்கார்ந்தான்: சுற்றுமுற்றும் பார்த்தான். கதவு ஒன்று திறந்தது. வந்தியத்தேவன் ஆவலுடன் பார்த்தான்.

திறந்த கதவின் வழியாக நந்தினி வந்தாள். வந்தவளைக் கண்கொட்டாமல் அவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய வியப்புக்கும் திகைப்புக்கும் பல காரணங்கள் இருந்தன. வர்ணனைக்கெட்டாத அவளுடைய சௌந்தர்யம் ஒரு காரணம். எதிர்பாராத முறையில் அவளைச் சந்திக்கும்படி நேர்ந்தது இன்னொரு காரணம். இலங்கையில் அவன் பார்த்திருந்த மூதாட்டியின் உருவத்தோடு இந்த யுவதியின் உருவம் எவ்வளவு ஒத்திருக்கிறது என்ற எண்ணம் மற்றொரு காரணம். உருவங்கள் ஒத்திருக்கின்றனவா? அல்லது அந்த மூதாட்டியேதான் உயரிய ஆடை ஆபரணங்களை அணிந்தபடியினால் இப்படித் தோற்றமளிக்கிறாளா?

இனிய கிண் கிணி நாதக் குரலில் "ஐயா? நீர் மிகவும் நல்லவர்!" என்று கூறினாள் நந்தினி.

வந்தியத்தேவன் "வந்தனம்!" என்றான்.

"நல்லவருக்கு அடையாளம் சொல்லாமற்போவதுதானே? தஞ்சை அரண்மனையிலிருந்து என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே போய் விட்டீர் அல்லவா!" என்றாள் நந்தினி.

வந்தியத்தேவன் நகைத்தான்.

"தஞ்சைக் கோட்டைக்குள் வருவதற்கு உமக்கு நான் உதவி செய்தேன். என் விரலிலிருந்து பனை முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொடுத்தேன். அதை என்னிடம் திருப்பிக் கொடுத்து விட்டாவது போயிருக்க வேண்டாமா?" என்று கேட்டாள்.

வந்தியத்தேவன் வெட்கித்து மௌனமாக நின்றான்.

"எங்கே? இப்போதாவது அதைத் திருப்பிக் கொடுக்கலாம் அல்லவா? அதன் உபயோகம் தீர்ந்து போயிருக்குமே? மறுபடியும் தஞ்சைக் கோட்டைக்கு வரும் எண்ணம் உமக்கு இல்லைதானே?" என்று கூறி நந்தினி தன் அழகிய மலர்க் கரத்தை நீட்டினாள்.

"தேவி! அந்த முத்திரை மோதிரத்தை இலங்கைத் தளபதி பூதி விக்கிரமகேசரி கைப்பற்றிக் கொண்டு விட்டார். ஆகையால் அதைத் திருப்பிக் கொடுக்க இயலவில்லை. மன்னிக்க வேண்டும்" என்றான் வந்தியத்தேவன்.

"என்னுடைய ஜன்ம சத்துருவிடம் நான் உமக்குக் கொடுத்த மோதிரத்தைக் கொடுத்து விட்டீர் அல்லவா! மிக்க நன்றியுள்ள மனிதர் நீர்."

"நானாகக் கொடுத்து விடவில்லை. பலவந்தமாக எடுத்துக் கொண்டார்கள்."

"வாணாதி ராயர் குலத்தில் உதித்த வீராதி வீரர் பலவந்தத்துக்கு உட்பட்டு ஒரு காரியம் செய்தீரா? என்னால் நம்ப முடியவில்லை!"

"அம்மணி! இங்கே இச்சமயம்தான்

வந்திருப்பதும் பலவந்தம் காரணமாகத்தானே? தங்களுடைய ஆட்கள்?..."

"உண்மையாகச் சொல்லும் ஐயா! நன்றாய் நினைத்துப் பார்த்துச் சொல்லும்! பலவந்தத்தினால் மட்டும் நீர் இங்கே வந்தீரா? இஷ்டப்பட்டு வரவில்லையா? பல்லக்கில் ஏற்றப்பட்ட பிறகு கீழே குதித்து ஓடுவதற்கு உமக்குச் சந்தர்ப்பம் இல்லையா?" என்று நந்தினி கேட்ட கேள்விகள் கூரிய அம்புகளைப் போல் வந்தியத்தேவன் நெஞ்சைத் துளைத்தன.

"ஆம்; இஷ்டப்பட்டுத்தான் வந்தேன்" என்றான்.

"எதற்காக வந்தீர்?"

"தாங்கள் எதற்காக என்னை அழைத்து வரச் செய்தீர்கள்?"

"என் முத்திரை மோதிரத்தைத் திருப்பிக் கேட்பதற்காக!"

"அது மட்டும்தானா?"

"இன்னும் ஒரு காரணமும் இருக்கிறது. என் கணவரின் பாதுகாப்புக்கு உட்பட்ட பொக்கிஷ நிலவறையில் நீர் அன்றிரவு இருந்தீர் அல்லவா?"

வந்தியத்தேவன் திடுக்கிட்டான்.

"எனக்குத் தெரியாது என்று எண்ணினீர்? அழகுதான்! எனக்குத் தெரிந்திராவிட்டால் அன்றிரவு நீர் தப்பிச் சென்றிருக்க முடியுமா?"

"தேவி!..."

"ஆம்; எனக்கும் தெரியும். பெரிய பழுவேட்டரையருக்கும் தெரியும். உம்மை அங்கேயே கொன்று போட்டுவிடும்படி பழுவேட்டரையர் சுரங்க வழிக் காவலனுக்குக் கட்டளையிட்டார். அவர் அப்பால் சென்றதும் நான் அந்தக் கட்டளையை மாற்றி விட்டேன். அதனால் நீர் பிழைத்தீர். உம்முடைய அழகான நண்பன் ஆபத்துக்கு உள்ளானான். இல்லாவிடில், அந்தப் பொக்கிஷ நிலவறையில் முத்துக் குவியல்களுக்குப் பக்கத்தில் உம்முடைய எலும்புகள் இப்போது கிடக்கும்!"

வந்தியத்தேவன் வியப்புக் கடலில் மூழ்கினான். அவள் கூறியவையெல்லாம் உண்மையென்று அவனால் நம்ப முடியவில்லை. உண்மையில்லாவிட்டால் தான் அன்று அங்கு ஒளிந்திருந்தது எப்படித் தெரிந்தது? சம்பிரதாயத்துக்காவது நன்றி கூற வேண்டியது அவசியம் என்று கருதி, "அம்மணி...!" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"வேண்டாம்; மனத்தில் இல்லாததை வெளியில் எதற்காகச் சொல்லப் பார்க்கிறீர்? எனக்கு நன்றி செலுத்த முயல வேண்டாம்!"

"இல்லை, தேவி..."

"உம்முடைய உயிரை அன்று காப்பாற்றியதைப்பற்றி எதற்காகச் சொன்னேன், தெரியுமா, உம்முடைய நன்றியை எதிர்பார்த்தல்ல. மறுபடியும் அந்தச் சுரங்க வழியை உபயோகிக்கப்பார்க்கவேண்டாம்என்றுஎச்சரிப்பதற்காகத்தான். அங்கே இப்போது மிகவும்வலுவான காவல் போட்டிருக்கிறது, தெரிகிறதா?"

"மறுபடியும் அந்தப் பக்கம் போகும் உத்தேசமே எனக்கு இல்லை."

"அது ஏன் இருக்கப் போகிறது? உதவி செய்தவர்களை நினைக்கும் வழக்கமேதான் உமக்கு இல்லையே? உம்மால் உம்முடைய சிநேகிதன் ஆபத்துக்கு உள்ளானான். அவனை என்னுடைய அரண்மனைக்கே எடுத்து வரச் செய்து, அவனுக்கு வைத்தியம் பண்ணுவித்துக் குணப்படுத்தி அனுப்பினேன். அதில் உமக்குத் திருப்திதானே? அல்லது நம்பிக்கைத் துரோகத்தைப் போல் சிநேகத் துரோகமும் உம்முடன் பிறந்ததா?"

நந்தினியின் வார்த்தை ஒவ்வொன்றும் விஷபாணத்தைப் போல் வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் ஊடுருவிச் சென்றது. அவன் துடிதுடித்து மௌனமாயிருந்தான்.

"உம்முடன் கோடிக்கரைக்கு வந்த வைத்தியர் மகனைத்தான் உமக்குப் பதிலாகப் பிடித்துக் கொடுத்து அனுப்பினீர். அவன் என்ன ஆனான் என்று விசாரித்தீரா?"

"தங்களைக் கேட்க எண்ணினேன்."

"சொல்லுகிறேன்; ஆனால் உம்மு

டன் இலங்கையிலிருந்து புறப்பட்ட இளவரசர் அருள்மொழி வர்மர் என்ன ஆனார்? அதைச் சொன்னால் நான் வைத்தியர் மகனைப் பற்றிச் சொல்லுவேன்.''

வந்தியத்தேவனுக்கு உடம்பை ஓர் உலுக்கு உலுக்கிப் போட்டது. இளவரசரைப் பற்றி அறிவதற்காகத்தான் தன்னை இவள் இப்படிப் பாடாய்ப் படுத்தினாளோ என்று தோன்றியது. ஏமாந்து போகக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

''அரசி! அதைப் பற்றி மட்டும் என்னைக் கேட்க வேண்டாம்!'' என்றான்.

''ஆம்! அதைப் பற்றி மட்டும் கேட்கக் கூடாதுதான்! கேட்டாலும் உம்மிடமிருந்து மறுமொழி வராது என்று எனக்குத் தெரியும். உம்முடைய காதலி எப்படியிருக்கிறாள்? அதைப் பற்றியாவது எனக்குச் சொல்லலாமா?''

வந்தியத்தேவனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. ''யாரைச் சொல்லுகிறீர்கள்? ஜாக்கிரதை!'' என்றான்.

''ஆகா! நான் ஜாக்கிரதையாகத்தான் இருக்கிறேன். அந்தப் பழையாறை மகாராணியைச் சொல்லுவதாக எண்ண வேண்டாம். அவள் உம்மைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டாள். தன் காலில் ஒட்டிய தூசிக்குச் சமானமாக உம்மை மதிப்பாள். உம்மை இலங்கையில் கொண்டு சேர்த்துத் திருப்பியும் அழைத்துவந்தாளே! அந்த ஓடக்காரப் பெண்ணைப் பற்றிக் கேட்கிறேன். பூங்குழலி உங்கள் காதலி அல்லவா?''

''இல்லை, இல்லவே இல்லை! அவளுடைய காதலர்களை அவளே எனக்குக் காட்டினாள். நள்ளிரவில் கோடிக்கரைச் சதுப்பு நிலத்தில் கிளம்பும் கொள்ளிவாய்ப் பிசாசுகளை எனக்குக் காட்டினாள். அவர்கள்தான் தன்னுடைய காதலர்கள் என்று சொன்னாள்.''

''அவள் பாக்கியசாலி! ஏனெனில் அவளுடைய காதலர்கள் ஒளி வடிவம் பெற்றிருக்கிறார்கள். பிரகாசமாகக் கண் முன் தோன்றுகிறார்கள். என்னுடைய காதலர்களோ இருள் வடிவமானவர்கள்; உருவம் அறிய முடியாதவர்கள். இருள் அடைந்த பாழும் மண்டபத்தில் நீர் எப்போதாவது நள்ளிரவு நேரத்தில் படுத்திருந்ததுண்டா? வௌவால்களும் ஆந்தைகளும் இறகுகளைச் சடபடவென்று அடித்துக் கொண்டு அந்த இருண்ட மண்டபங்களில் உருத் தெரியா வடிவங்களாகப் பறந்துதிரிவதைப் பார்த்ததுண்டா? அம்மாதிரி வடிவங்கள் என் உள்ளமாகிய மண்டபத்தில் ஓயாமல் பறந்து அலைகின்றன. இறகுகளை அடித்துக் கொள்கின்றன. என் நெஞ்சைத் தாக்குகின்றன. என் கன்னத்தை இறகுகளால் தேய்த்துக் கொண்டு செல்கின்றன! அந்த இருள் வடிவங்கள் எங்கிருந்து வருகின்றன? எங்கே போகின்றன? ஏன் என்னைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுகின்றன? ஐயோ! உமக்குத் தெரியுமா?'' — இவ்விதம் கூறிவிட்டு நந்தினி வெறி கொண்ட கண்களால் அங்குமிங்கும் பார்த்தாள்.

வந்தியத்தேவனுடைய வயிர நெஞ்சமும் கலங்கிப் போயிற்று. ஒரு பக்கம் இரக்கமும் இன்னொரு பக்கம் இன்னதென்று தெரியாத பயமும் அவன் மனத்தில் குடிகொண்டது.

''தேவி! வேண்டாம்; கொஞ்சம் சாந்தி அடையுங்கள்!'' என்றான்.

''என்னைச் சாந்தி அடையும்படி சொல்வதற்கு நீர் யார்?'' என்று கேட்டாள் நந்தினி.

''நான் வாணர் குலத்தில் வந்த ஏழை வாலிபன். தாங்கள் யார், தேவி!''

''நான் யார் என்று கேட்கிறாய்! அதுதான் எனக்கும் தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்கத்தான் முயன்று கொண்டிருக்கிறேன். நான் யார்? மானிடப் பெண்ணா? அல்லது பேயா, பிசாசா என்று கேட்கிறாயா?''

''இல்லை, இல்லை! தெய்வ லோகத்திலிருந்து தவறி விழுந்த தேவப் பெண்ணாகவும் இருக்கலாம் அல்லவா? தெய்வ சாபத்தினால்......''

''ஆம்; தெய்வ சாபம் என் பேரில் ஏதோ இருக்கிறது, அது என்னவென்று மட்டும் தெரியவில்லை. நான் யார், எதற்காகப் பிறந்தேன் என்பதை அறியேன். இதுவரையில் ஒரே ஒரு சூசகத்தை மட்டும் தெய்வம் எனக்கு அளித்திருக்கிறது. இதோ பார்!'' என்று கூறி நந்தினி அவள் அருகில் இருந்த வாளை எடுத்துக் காட்

## அருள்வாக்கு



மஹா விஷ்ணுவுக்குப் ப்ரீதியான நாமாக்கள் பன்னிரண்டு. அவற்றில் 'கோவிந்த' என்பது ஒன்றாக வருகிறது. இது தவிர மூன்றே மூன்று நாமாக்கள் மஹா விஷ்ணுவுக்கு ரொம்பவும் விசேஷமானவை என்று எடுத்திருக்கிறார்கள். இந்த மூன்று நாமாக்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆசமனமாக மூன்று ஆசமனம் பண்ணி விட்டு, அப்புறம் அந்தப் பன்னிரண்டு நாமாக்களைச் சொல்லிக் கன்னம், கண், மூக்கு, காது, புஜம், ஹ்ருதயம், சிரஸ் முதலியவைகளைத் தொட்டால் தேஹ சுத்தி உண்டாகிறது. எந்தக் கர்மாவானாலும் முதலில் இப்படிச் செய்து சரீரத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். மூன்று முறை ஆசமனம் செய்கிற போது சொல்கிற நாமாக்கள் "அச்யுத, அனந்த, கோவிந்த" என்கிறவையே.

இப்படியாக விசேஷமான பன்னிரண்டு நாமாக்கள், அதனிலும் விசேஷமான மூன்று நாமாக்கள், இரண்டிலும் வருகிற ஒரே ஒரு நாமம் '**கோவிந்த**' என்பதுதான்:

கேசவ — நாராயண — மாதவ — கோவிந்த — விஷ்ணு — மது ஸூதன — த்ரிவிக்ரம — வாமன — ஸ்ரீதர — ஹ்ருஷீகேச — பத்மநாபா — தாமோதர.

அச்யுத, அனந்த, கோவிந்த.

மூன்றிலே ஒரு நாமாவாக இருக்கப்பட்ட "கோவிந்த" என்பதை "பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோவிந்தம்" என்று மூன்று தரம் ஆசார்யாள் சொல்லிச் சொல்லி ஸந்தோஷப்பட்டிருக்கிறார். ஒன்றை ஸத்ய ப்ரமாணமாகச் சொல்ல வேண்டுமானால் மூன்று தரம் திருப்பிச் சொல்வார்கள்.

இப்படி ஆசார்யாள் சொன்னது மட்டுமில்லாமல், ஆண்டாளும் மூன்று இடங்களில் கோவிந்தநாமாவைப் பிரயோகித்திருக்கிறாள், அவளுடைய திருப்பாவையிலே. திருப்பாவையின் கடைசியான முப்பதாவது பாட்டு அதற்கு பல ச்ருதி. அதை விட்டு விட்டால் அதற்கு முந்திய மூன்று பாட்டுக்களிலும் "கோவிந்தா" என்றே பகவானைக் கூப்பிட்டிருக்கிறாள். இருபத்தேழாவது பாட்டில் "கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா!" என்கிறாள். இருபத்தெட்டாவதில்தான் "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்பது. இருபத்தொன்பதாவது பாட்டில் "இற்றைப் பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா!" என்கிறாள்.

**— ஜகத்குரு, காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

டினாள். புதிதாகச் செப்பனிடப்பட்ட அந்தக் கூரிய வாள் தீப வெளிச்சத்தில் பளபளவென்று ஜொலித்துக் கண்ணைப் பறித்தது.

வந்தியத்தேவன் அந்த வாளைப் பார்த்தான். பார்த்த உடனே அது கொல்லன் பட்டறையில் தான் பார்த்த வாள் என்பதைத் தெரிந்து கொண்டான். இது வரையில் நந்தினியின் வார்த்தைகளாகிற விஷ பாணங்களினால் அவன் துடி துடித்துக் கொண்டிருந்தான். இப்போது இரும்பினால் செய்த வாளாயுதத்தைப் பார்த்ததும் அவனுடைய மனம் திடப்பட்டது. ஏனெனில் வாள், வேல் முதலிய ஆயுதங்கள் அவனுக்குப் பழக்கப்பட்டவை. பிறந்தது முதல், அவனுடன் உறவு பூண்டவை. ஆகையால் பயமில்லை! நந்தினி அந்த வாளைத் தன் பேரில் பிரயோகிப்பதாயிருந்தாலும் பயம் கிடையாது!

"தேவி! பார்த்தேன்; வாளைப் பார்த்தேன். வேலைப்பாடு அமைந்த வாள்; அரச குலத்துக்கு உரிய வாள். வீராதி வீரர்களின் கைக்கு உகந்த வாள். அது மெல்லியல் கொண்ட தங்கள் அழகிய கையில் எப்படி வந்தது? அதன் மூலம் தெய்வம் தங்களுக்கு அளித்திருக்கும் சூசகம்தான் என்ன?" என்று கேட்டான்.

(தொடரும்)

# யதார்த்தம்

''என்னைக் கேட்டா ஆண்களும், பெண்களும் சேர்ந்து படிக்கும் காலேஜை யெல்லாம் முதலில் ஒழிச்சுக் கட்டணும். அப்பத்தான் எதிர்காலச் சந்ததியெல்லாம் கொஞ்சமாவது உருப்படும். காதலாம் காதல்!... கத்தரிக்காய்!...'' — கோபமாகச் சொன்னான் ராஜன். அவன் கையில் இருந்த முழு நீளக் காகிதம், ஸீலிங் ஃபேன் சுழற்றி வீசிய காற்றில் படபடத்தது.

''ஸ்கூல்லேயே காதலிச்சாங்கன்னு என்ன பண்ணுவீங்க?'' சிரித்துக் கொண்டே கிண்டலாகக் கேட்டாள் பூங்கோதை.

''நான் சொன்னது ஸ்கூல், காலேஜ் எல்லாத்தையும் சேர்த்துத்தான்...'' — அவசரமாகச் சொன்னான் ராஜன்.

''இல்லே டாக்டர்! நீங்க சொல்றதை என்னாலே ஒத்துக்க முடியலே. பிரச்னையின் மூல காரணத்தைப் புரிஞ்சுக்காம நீங்க தீர்வு சொல்றீங்க...'' — அழுத்தமாகச் சொன்னாள் பூங்கோதை.

பி. எச். டி. பட்டம் வாங்கிய அவனை அவள் எப்போதுமே 'டாக்டர் டாக்டர்' என்றுதான் அழைப்பாள்.

டாக்டர் ராஜன், பூங்கோதை இருவருமே அந்தக் கல்லூரியின் உதவிப் பேராசிரியர்கள். பூங்கோதை வேலையில் சேர்ந்த நாளிலிருந்தே இத்தகைய பிரச்னைகளின் போது ஏற்பட்ட அறிவு பூர்வமான விவாதங்களில் தொடங்கிய அவர்களுடைய நட்பு, ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்ட காதலாகவே மாறி விட்டிருந்தது. ராஜனுக்கு ஒரே தங்கை. அவளது திருமணத்திற்குப் பிறகுதான் ராஜனின் திருமணப் பேச்சு என்ற நிலையிருந்ததால், அவர்களது காதல் நீண்டு கொண்டிருந்தது.

இன்றைய பிரச்னை இதுதான்:

தயாநிதி என்ற மூன்றாமாண்டு வேதியியல் படிக்கும் மாணவன் ஒருவன், வசுமதி என்ற முதலாமாண்டு எகனாமிக்ஸ் மாணவிக்குக் காதல் கடிதம் எழுதி விட்டான். அதையும் நேரில் கொடுக்கத் தைரியமின்றித் தபாலில் அனுப்பி விட்டான். கடிதத்தை வாங்கிப் படித்த மாணவி, 'ஓ'வென்று அழுதவாறு பூங்கோதையிடம் வந்து புகார் செய்து விட்டாள்.

கடிதத்தை மீண்டும் ஒரு முறை படித்துப் பார்த்தான் ராஜன். 'அன்பே வசுமதி! உன் கண்கள் எனும் மீன்கள் என்னை வலை வீசிப் பிடித்து விட்டன'... என்று ஆரம்பித்து... 'என் காதலை நீ ஏற்காவிட்டால், கல்லூரிக்கு ஒரு நாள் விடுமுறை விடும் சூழ்நிலை ஏற்படும்' (அதாவது அவன் தற்கொலை செய்து கொள்வானாம்) என்று, ஆங்காங்கே எழுத்துப் பிழைகளோடு காதற்பா பாடியிருந்தான்.

''ராஸ்கல்! தப்பு இல்லாம தமிழிலே நாலு வரி எழுத முடியலே, லவ் லெட்டர் எழுதறானாம், லவ் லெட்டர்...'' — கடிதத்தை நான்காக மடித்தவாறே கோபமாகச் சொன்னான் ராஜன்.

''நீங்க சொல்றதைப் பார்த்தா காதலிக்கறதே மகாபாவம்னு சொல்றது மாதிரியில்லே இருக்குது?'' — மீண்டும் பூங்கோதையின் வார்த்தைகளில் கிண்டல் பூசப்பட்டிருந்தது.



''பீ ஸீரியஸ் பூங்கோதை. அததுக்கு ஒரு வயசு இருக்கு...''

''நானும் சிரியஸாத்தான் சொல்றேன் டாக்டர். அததுக்கு ஒரு வயது இருக்குங்கறது உண்மைதான். ஆனால் அந்த உண்மையை உரிய நேரத்திலே, உரிய முறையிலே புரிய வைக்காததுதான் நாம — பெரியவங்க — பண்ணுற பெரிய குற்றம்...'' பூங்கோதையும் கொஞ்சம் கோபமாகவே பதில் சொன்னாள்.

இருவரது கோபமும் பரஸ்பரம் மற்றொருவரை மௌனமாக்கியது.

''காதல் என்கிற வார்த்தையைக் கொச்சைப்படுத்தறதே நாமதான் டாக்டர். நம்முடைய சில தவறான பழக்க வழக்கங்களும், வளர்ப்பு முறைகளும்தான் இன்றைய இளைஞர்களின் சீரழிவிற்கு முக்கிய காரணமா இருக்கு...'' — மௌனத்திற்கு விடை கொடுத்து விட்டுப் பேச ஆரம்பித்தாள் பூங்கோதை.

ராஜன் ஒன்றும் பேசாமலிருந்தான்.

''ஆண் — பெண் கூட்டுக் கல்வியை ஒழிச்சிட்டாலே இந்த மாதிரி பிரச்னையெல்லாம் தீர்ந்து போயிடும்னு சொல்றீங்களா டாக்டர்?''



# ராஜேஷ்குமார்

''நான் அப்படிச் சொல்ல வரலே கோதை. நெருப்புக்குப் பக்கத்திலே பஞ்சிருந்தாப் பத்திக்குமுன்னு தெரிஞ்சே ஏன் அந்தத் தப்பைச் செய்யணும்? இந்த வயசுக்கு இந்த மாதிரி உணர்வுகள் ஏற்படுவது இயற்கை. காதல் காதல்ன்னு இவங்க பேத்தறதெல்லாம் எந்தப் புள்ளியிலிருந்து ஆரம்பமாகுது தெரியுமா? வேறென்ன? காமம் தான்! ஏதோ ஒரு வேட்கையிலே இவங்க தப்புப் பண்ணிடும் போது, ஆண் ரொம்ப ஈஸியா நழுவிடுறான். ஆனா அந்தப் பெண்ணோட நிலையை நினைச்சுப் பாருங்க கோதை. அழிந்து போவது என்னவோ பஞ்சுதானே?''

''மன்னிக்கணும் டாக்டர். இந்தப் பஞ்சு — நெருப்பு தியரியே எனக்கு ரொம்ப அபத்தமாப்படுது. யார் பஞ்சு? யார் நெருப்பு? இப்படி அர்த்தமில்லாத உவமைகளைப் பேசியே, ஏதோ பார்த்துக்கக் கூடாத எதிர்த் துருவங்களைப் போல ஆணையும் பெண்ணையும் பிரிச்சு வைச்சுட்டீங்க. அதுதான் முதல் தப்பே. ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் இயற்கையிலேயே ஓர் ஈர்ப்பு இருக்குங்கிறதை நான் மறுக்கலே. ஆனால் அதையே நல்ல வழியிலே ஆரோக்கியமான முன்னேற்றத்துக்குப் பயன்படுத்த முடியுங்கிறதை நாம யாருமே சிந்திக்கிறதில்லே. ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்து உழைக்கிற போது, பெரிய வேலையைக் கூட, சிரமம் தெரியாமல் எளிதா முடிக்க முடியும் தெரியுமா? கல்விக் கூடங்களிலே கூட ஆண் — பெண்ணுக்கிடையே ஒரு ஆரோக்கியமான போட்டியை ஏற்படுத்தி நல்வழிப்படுத்த முடியும். ஆனால் நாம தான் அஞ்சு வயசு ஆன உடனேயே, 'கழுதை! ஆம்பிளைப் புள்ளையோட உனக்கென்ன விளையாட்டு?'ன்னு வேலி போட்டுடறோமே! நம்முடைய அப்ரோச்சே நெகட்டிவ் அப்ரோச்சா இருக்கு டாக்டர். அணு ஆற்றலாலே உலகமே அழியிற அபாயமிருக்கு — ஆனா அதையும் கூட நல்ல வழிக்குப் பயன்படுத்த முடியுதே! நாம சிந்திக்கவே மாட்டோம்னு பிடிவாதம் பிடிக்கிறோம்...''

ராஜன் ஒன்றும் பேசாமல் அவள் பேசுவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''வேற ஒண்ணுமில்லே டாக்டர். நாம யதார்த்தத்தைச் சந்திக்கப் பயப்படுகிறோம். யதார்த்தத்தைப் பார்த்துப் பயந்து ஓடி ஒளிஞ்சுக்கிறோம். செயற்கையான ஒரு போர்வைக்குள்ளே நம்மை மறைச்சுக்கிட்டு ஞானிகளைப் போலக் காட்டிக் கொள்ளப் பார்க்கிறோம். அதனாலேதான் என்றைக்காவது ஒரு நாள் அந்த யதார்த்தத்தை நேருக்கு நேர் சந்திக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படும் போது 'ஐயோ'ன்னு இடிந்து ஒடிந்து போய் உட்கார்ந்து விடுகிறோம். ஓர் ஆணும் பெண்

ணும் பார்த்துக் கொண்டாலே அது காதல் பார்வையாகத்தான் இருக்க வேண்டும் என்று ஒரு தவறான எண்ணத்தை இளைஞர்களிடத்திலே ஏற்படுத்துறதே நம்ம சமுதாய அமைப்புத்தான் டாக்டர்.''

''நீங்க சொல்றதெல்லாம் சரிதான் கோதை. ஆனால் இப்போ இந்த லவ் லெட்டரை என்ன பண்ணப் போறீங்க? பேசாம பிரின்ஸிபாலிடம் அனுப்பிடுங்க. அவர் பார்த்துக்குவார்'' என்றான் ராஜன்.

''இல்லே டாக்டர். பிரச்னையை நானே தீர்த்து வைத்து விட முடியும். அந்த லெட்டரை எழுதிய பையனை அழைத்து வர ஆள் அனுப்பியிருக்கிறேன்!''

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்த மாணவன் ஒருவன் தயங்கி நின்றான். மற்ற ஆசிரியர்கள் எல்லோரும் வகுப்புகளில் இருந்ததால் ஓய்வறையில் ராஜனும் பூங்கோதையும் மட்டுமே இருந்தனர்.

''நீ தான் தயாநிதியா தம்பி?'' — பூங்கோதை கேட்டாள்.

''ஆ... ஆமாம் மேடம்'' — அவன் குரலில் நடுக்கம்.

''இந்த லெட்டரை நீதானே எழுதினே?..''

''ஆ... ஆமாம் மேடம்''

''பயந்து போய், 'இந்த லெட்டரை நான் எழுதவே இல்லே'ன்னு பொய் சொல்லாம, தைரியமா உண்மையை ஒத்துக்கிட்டதுக்காக நான் உன்னைப் பாராட்டுகிறேன் தம்பி. அப்பமன்னு, நீ அந்த வசுமதியை ரொம்பவும் காதலிக்கிறே, அப்படித்தானே?'' — புன்னகையுடன் கேட்டாள்.

அவன் மெதுவாகத் தலையை மட்டும் மேலும் கீழுமாக ஆட்டினான்.

''அந்த வசுமதி இப்பத்தானே காலேஜ்லே சேர்ந்திருக்கா. அவளை முன்பிருந்தே உனக்குத் தெரியுமா தம்பி?''

''இல்லே மேடம்... இப்பத்தான்...''

''அவளோட அப்பா, அம்மா, குடும்பச் சூழ்நிலை ஏதாவது தெரியுமா?''

''தெரியாது மேடம்...''

''அவளோட குணம்... அதாவது அவள் நல்லவளா? சாந்தமானவளா? கோபக்காரியா? ஏதாவது தெரியுமா...?''

''.......''

''அவளோட ஒரு வார்த்தையாவது பேசியிருக்கியா நீ?''

''ஊஹூம்...''

''உன்னை அவளுக்குத் தெரியுமா?... அவள் உன் முகத்தைப் பார்த்திருக்காளா? உன் பேராவது அவளுக்குத் தெரியுமான்னு உனக்குத் தெரியுமா?''

''தெரியாது....''

''பார்க்கிறதுக்குக் கொஞ்சம் லட்சணமா, அழகா இருந்துட்டா உடனே லவ் லெட்டர் எழுதிடலாமா?....''

''......''

''உன் காதலை அவள் ஒத்துக்கலேன்னு, உடனே தற்கொலை பண்ணிப்பியாக்கும்? ஏன் ஊரிலே வேற பெண்ணே இல்லேயா? இப்படி எழுத வெட்கமா இல்லே உனக்கு? காதலைக் கட்டாயப்படுத்தி ஏற்படுத்த முடியாது தம்பி. அது காலப்போக்கிலே ஊற்றெடுத்துச் சுரக்க வேண்டிய அன்பு. அப்படி உருவாகிற காதல்களே இந்தக் காலத்துலே நிறைவேறும போகுது. அதனாலே சும்மா கற்பனைக் கோட்டைகளைக் கட்டாம, யதார்த்த உலகத்துக்கு வா. யதார்த்தம் எதுன்னு புரிஞ்சுக்க முயற்சி பண்ணு. அப்படி நீ யதார்த்தத்தைப் புரிஞ்சுக்கிட்டீன்னு, எந்த ஒரு தோல்வியையும் தாங்கிக்கிற மனப்பக்குவம் உனக்கு வந்துடும்...''

''..........''

''சொல்றது புரியுதா இல்லேயா? பேசாம இந்த லெட்டரைக் கிழிச்சுப் போட்டுட்டு, ஒழுங்காப் படிக்கிற வழியைப் பாரு.... போ.....''

அவன் மெதுவாகத் தலையை ஆட்டியவாறே, தரையைப் பார்த்துக் கொண்டே வெளியேறினான்.

''எல்லாப் பிரச்னைக்குமே நீங்க ஒரு நல்ல முடிவு வைச்சிருக்கீங்க கோதை...'' என்றான் ராஜன் சிரித்தவாறே.

---

''அந்த மாப்பிள்ளைக்குச் சமையல் வேலை எல்லாம் தெரியுமாமே! அப்புறம் ஏண்டி அவரைக் கட்டிக்க மாட்டேன்னு சொல்லிட்டே?''

''எல்லா வேலையும் தெரிஞ்சு என்ன பிரயோஜனம்? கோலம் போடத் தெரியாதாமே?''

— கா. ராஜ்பிரபு.



---



''டாக்டர், எனக்கு வரவர ஞாபக மறதி ஜாஸ்தி ஆயிட்டது!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''நேற்று பாருங்களேன், ஒரு ஃபைலில் லஞ்சம் வாங்காம கையெழுத்துப் போட்டுட்டேன்!''

— இளை. அ. கதிர்வேல்.

# காலை முதல் இரவு வரை






நன்கு திட்டமிடப்பட்ட அமைதியான ஓய்வுக் கால வாழ்விற்கு

## மாதாந்திர வருமானத் திட்டம்

| | | |
|---|---|---|
| காலை 5-00 மணி | : | உற்சாகமான காலை வேளை! ஒரு கப் காபி அல்லது டீ அருந்துங்கள்! |
| காலை 5-30 மணி | : | காலை உலா போதல் |
| காலை 7-30 மணி | : | செய்திப் பத்திரிகைகளைப் படித்தல் |
| காலை 8-00 மணி | : | உறவினர் வீட்டுத் திருமணத்திற்குப் போவது அல்லது உற்ற நண்பரின் பிறந்த நாள் விழாவில் பங்கு கொள்வது |
| பகல் 1 மணி | : | சாப்பாடு |
| பகல் 2 மணி | : | புத்தகம் படித்தல் |
| மாலை 5-30 மணி | : | செல்வக் குழந்தைகளுடன் சீராட்டு |
| மாலை 6-30 மணி | : | டிவி பார்த்தல் |
| இரவு 10 மணி | : | மனநிறைவோடு தூங்கப்போவது |

மாதாந்தர வருமானத் திட்டத்தில் முதலீடு செய்துள்ள நீங்கள் ஓய்வு பெற்றதாகவே உணர மாட்டீர்கள்! ஓய்வு பெற்றபின்பு, அடிப்படைப் பொருளாதார பக்க பலத்தை அது உங்களுக்கு அளிக்கிறது.

**சிறு சேமிப்பு உங்கள் வாழ்க்கையில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தும்**

இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்:

- தனி நபராகவோ அல்லது இருவர் கூட்டாகவோ முதலீடு செய்யலாம்.
- குறைந்த அளவு முதலீடு ரூ. 5000|-மும் அதன் பெருக்குத் தொகைகளிலும். தனி நபர் அதிகபட்சம் ரூ. 1,00,000 வரையிலும், இருவர் கூட்டாக ரூ. 2 லட்சம் வரையிலும் முதலீடு செய்யலாம்.
- 12% வட்டி கிடைக்கும். இந்த வட்டியை மாதந்தோறும் பெற்றுக் கொள்ளலாம்.
- இந்த முதலீடுகள் அஞ்சலகங்களில் பெற்றுக் கொள்ளப்படும்.
- முதலீடு 6 வருடத்திற்கு ஏற்றுக் கொள்ளப்படும். தேவையானால் பணத்தை 1 வருடத்திற்குப் பிறகு திரும்பப் பெறலாம்.
- முதலீடு தொடர்ந்து 6 வருடங்கள் இருந்து அது முதிர்வு அடையும்போது ஒவ்வொரு ரூ. 5000|-க்கும் போனஸாக ரூ. 500|- கொடுக்கப்படும்.
- இத்திட்டத்தில் வாரிசுதாரரை நியமிக்கும் உரிமையும் உண்டு.
- உங்கள் பணம் பத்திரமானது, பாதுகாப்பானது.
- ஓய்வு பெறுபவர்களுக்கும், ஓய்வு ஊதியம் பெறுபவர்களுக்கும் மிகவும் உகந்த திட்டம்.

கு. சம்பத்குமார், ஐ.ஏ.எஸ்.
சிறு சேமிப்பு இயக்குநர்
143, அண்ணா சாலை
சென்னை-600 002

DIPR/840/MS/88 Efficient

"அடேங்கப்பா...! அப்போ எங்க கம்பெனி முதலாளியிடம் நாங்க வேலே வாங்க எவ்வளவு கஷ்டப் பட்டோம், தெரியுமா...?"

"சரி, இப்போ எப்படி?"

"அவர் எங்ககிட்டே வேலே வாங்கக் கஷ்டப்படுறர்!"

— கடுவை. கோபால்சாமி.

"என்ன டாக்டர், கிண்டலா?..."

"சரிங்க கோதை. எனக்கு நேரமாச்சு. மதியம் லீவு போட்டுட்டுப் போறேன். தங் கச்சியைப் பெண் பார்க்க மாப்பிள்ளே வீட்டார் வர்ருங்க..."

"இது எத்தனேயாவது மாப்பிள்ளே? எந்த ஊர்க்காரர்? இந்த இடமாவது முடியுமா? என் வாழ்க்கைக்கு வழி பிறக்குமா?" — வழக்கமான கிண்டலுடன் கேட்டாள்.

"மாப்பிள்ளேக்கு மன்னர்குடியிலே பேங்க் உத்யோகமாம். பார்ப்போம்! வர்ற மாப்பிள்ளேயெல்லாம் யானேயைக் கொடு, குதிரையைக் கொடுன்னு சக்திக்கு மேலே கேட்கிருன். அவளுக்கும் வயசு போயிக் கிட்டே இருக்கு..."

"உம்ம்... தங்கைக்குச் செலவழிக்கிறதை யெல்லாம் கணக்கு வைச்சுக்கிட்டு, அது மாதிரி எத்தனே மடங்கு எங்கப்பாக்கிட்டே கறக்கலாம்னு திட்டம் போட்டுக்கிட்டு இருக்கீங்களோ என்னவோ?...."

"மூச்!..." என்று சொல்லி விட்டுக் கிளம்பினுன் ராஜன்.

அடுத்த நாள் காலே — கல்லூரிக்கு வந்த ராஜனின் முகத்தில் கவலேக் கோடு கள். பூங்கோதை அதை உடனே உணர்ந்து விட்டாள்.

"என்ன டாக்டர்? எந்தக் கப்பல் கவிழ்ந் துடுச்சு?..." என்ருள் வழக்கமான கிண் டலுடன்.

அவன் சரியாகப் பதில் சொல்லவில்லே. "அடுத்த வகுப்புக்காகப் படிக்கிறேன்" என்று பாசாங்கு செய்தான்.

ஏதோ நடந்திருக்கிறது.

அவளுடன் பேசுவதையே தவிர்க்கப் பார்த்தான். இந்த வித்தியாசம் பூங்கோ தையை வருத்தியது. மதியம் உணவு இடை வேளேயின் போது கிடைத்த தனிமையை அவள் பயன்படுத்திக் கொண்டாள்.

"எப்படியிருந்தாலும் விஷயத்தைச் சொல்லித்தானே ஆகணும். கவலேயை என்னேடு பகிர்ந்துக்கிட்டா என்ன குறைஞ் சுடும்? சொல்ல வேண்டாம்னுச் சொல்லா தீங்க...."

"அது.... வந்து....." — அவன் நிறுத்தி விட்டு அவளேப் பார்த்தான்.

"சொல்லுங்க டாக்டர்!"

"நேத்திக்கு என் தங்கையைப் பார்க்க வந்த மாப்பிள்ளேக்கு, ஒரு தங்கை இருக் காளாம். அவளே நான் பண்ணிக்கிறதா இருந்தா, என் தங்கையை அவங்க ஏத்துக்கு வாங்களாம்... வீட்டிலே எல்லோரும் கட் டாயப்படுத்துருங்க... எனக்கு வேறு வழி தெரியலே..." தயங்கித் தயங்கி ராஜன் வெளிப்படுத்திய விஷயத்தைக் கேட்டதும் பூங்கோதை அதிர்ந்து போனுள். ஆனுல் அடுத்த விநாடியே சுதாரித்துக் கொண் டாள்.

"இதிலென்ன தயக்கம் டாக்டர். பெண் ணேக் கொடுத்துப் பெண்ணே எடுத்துக்க வேண்டியதுதானே! சம்மதம்னு 'பளிச்'னு சொல்லியிருக்க வேண்டியதுதானே?" — அமைதியாகப் பேசினுள்.

இப்போது ராஜன் அதிர்ந்து போனுன். இவளால் இவ்வளவு பெரிய விஷயத்தை எப்படி இவ்வளவு சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடிகிறது? அவளே ஒன்றும் புரி யாமல் பார்த்தான்.

"என்ன டாக்டர், ஆச்சரியமாப் பார்க் கிறீங்க? எனக்கும் கொஞ்சம் அதிர்ச்சியாத் தான் இருக்கு. அழணும் போலத்தான் தோணுது. ஆனுல் இது தானே யதார்த்தம்! நான் எதைப் பத்தியும் அதிகமா கற்பனேக் கோட்டை கட்டுறதில்லே டாக்டர். யதார்த் தத்தை எதிர் கொள்ள நான் பயப்படறதும் இல்லே. அதனுலே தோல்விகளே என்னுலே தாங்கிக்க முடியும். வேறென்ன நடந்து விடப் போகிறது? இத்தனே நாள் உங்களே நம்பியிருந்தேன். என்ன இருந்தாலும் உங் களேயே நம்பிய உங்கள் தங்கைதானே உங்களுக்கு முக்கியம்! ப்ச்ச்.... அப்பாவிடம் விஷயத்தைச் சொல்லி, ஜாதகத்தைத் தரகரி டம் கொடுக்கச் சொல்ல வேண்டும். அவ் வளவுதான்...."

யாருடைய பிரச்னேயோ என்பது போலப் பேசிக் கொண்டிருந்தாள் பூங்கோதை.



பனாரஸ், பனாரஸ் ஆர்கன்சா, மைசூர் கிரேப்,
கோட்டா, கட்டம், பட்டு சேலைகளும்
புகழ் பெற்ற சேலம் பட்டு வேஷ்டிகள்
பட்டு ஷர்டிங்குகள் வாங்க
சிறந்த நிறுவனம்



"மா மவ மீனாட்சி"

**மீனாட்சி அம்மன்**
**சாரி பாரடைஸ்**

23, இரண்டாவது அக்ரஹாரம்
(முதல் மாடி) சேலம்-636 001


64667, 66506

நான் ரசிப்பது...
**காளி மார்க்**
பருகப்பருக
பெருகிடும் இன்பம்!







ARTIFICIALLY FLAVOURED. CONTAINS NO FRUIT JUICE OR PULP.

காளி மார்க் :
- சோடா
- ஓ.கே.
- ஆரஞ்சு
- லெமன்
- ஜிஞ்சர்
- செர்ரி.

ADWAVE/KALI/2917 RR

# பாம்பே டையிங் 

# சீருடைகள்





வெள்ளையும் வெள்ளையுமா?
சிகப்பும் வெள்ளையுமா?
பச்சையும் மஞ்சளுமா?
நீலமும் வெள்ளையுமா?
இல்லை வெள்ளையும் காக்கியுமா?

ஆரம்பப்பள்ளியா?
முதல்நிலைப்பள்ளியா?
நடுநிலைப்பள்ளியா?
உயர்நிலைப்பள்ளியா?
இல்லை, மேல்நிலைப்பள்ளியா?





**நிறம் ஏதானாலும்**
**சீருடை பாம்பே டையிங்.**

**நிலை ஏதானாலும்**
**சீருடை பாம்பே டையிங்.**

எங்களது 100க்கும் மேற்பட்ட ஷோரூம்களிலும்,
750க்கு மேற்பட்ட அங்கீகரிக்கப்பட்ட டீலர்களிடமும் கிடைக்கும்.



விநியோகஸ்தர்கள் :
**சிவ்ராம்ஸ் அஸோஸியேட்ஸ்/சிவ்சேல்ஸ்** கோவை - 11. சென்னை - 17.

Bankers : The Federal Bank Ltd

பாம்பே டையிங் 

BRIGHT/SAC

# என் பொம்முக்குட்டி அம்மாவுக்கு



சிக்கலில்லாத கதை. ஆனால் சுவையான பின்னல்!

சுஹாசினி — சத்யராஜ் ஜோடியின் ஒரே குழந்தை மரித்துப் போனதும் (ஒரு விபத்து... ச்ச்ச்...) சுஹாசினி குழந்தை நினைவாகவே இருக்க, அந்த அன்னை மனம் ஆறுதல் அடைய வேண்டும் என்பதற்காக ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள, கடைசியில் அந்தக் குழந்தையும்... நோ... நோ... நீங்கள் நினைக்கிறதுபோல் அந்தக் குழந்தையும் செத்துப் போவதாகக் காட்டப்படவில்லை. ஒரிஜினல் தாயிடம் போய்ச் சேருகிறது. தத்து எடுத்த தாய் மறுபடி சோக சாகரத்தில் மூழ்க வேண்டிய ஒரு நிலைமை.

சுஹாசினியைக் காதலியாக, சுட்டிப் பெண்ணாக, துடிக்கும் சிங்காரியாக எல்லாம் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டு விட்டதாலோ என்னவோ, வளர்ந்த குழந்தைக்குத் தாயாகப் பார்க்க, முதலில் என்னமோ மாதிரி இருக்கிறது. போகப் போக ஒட்டி விடுகிறார் — படத்திலும், மனத்திலும்!

அனாதை ஆசிரமத்திற்கு சத்யராஜுடன் போய், ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளும் உத்தேசத்துடன் ஆசிரமத்திற்கு கூட்டி வரப்பட்டிருக்கிறோம் என்ற உண்மை தெரிந்தவுடன், கோபம் கொண்டு புயலாக வீட்டுக்குத் திரும்பி விட — வீட்டுக்குத் திரும்பிய பின்னர் ஆசிரமத்தில் பார்த்த அந்தத் 'துடுக்' குழந்தையின் 'வெடுக்' பேச்சு சுஹாசினியின் இதயத்தைப் பிசையோ பிசை என்று பிசைய, சுஹாசினி தானாகவே வலியச் சென்று அதே குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டு அழைத்து வரும் மொத்த வரிசைக் காட்சிகளிலும் —

டைரக்டரும், சுஹாசினியும், சத்யராஜும் கைகோத்துக் கொண்டு செயல்பட்டிருக்கிறார்கள். க்ளாப், க்ளாப், க்ளாப்.

அடக்கி வாசித்திருப்பவர்கள் இரண்டு பேர்: சத்யராஜ், ரகுவரன். வித்தியாசம்!

அடக்காமல் வாசித்திருப்பது அந்தக் குழந்தை. அதன் பெயர் சீதுவோ என்னவோ சொன்னார்களே.... கடைசி வரை குழந்தை நட்சத்திரமாகவே இருந்து நம் உள்ளங்களை இன்று போல் என்றும் கொள்ளை கொள்ளக் கூடாதா என்று ஏங்கவே ஆரம்பித்து விடுகிறோம்! — நடக்காது என்பது தெரிந்திருந்தும்.

ரேகா: எண்ணிப் பார்த்தால் இரண்டு சீன்களோ என்னவோ. நிஜ மனநோயாளி எப்படி இருப்பாரோ... இவர் பாதித்து விட்டார் நம்மை.

இளையராஜா இனிய ராஜா. ஆர்ப்பாட்டமற்ற சங்கீதம்.

பாசில் டைரக்ஷன் என்றாலே ஜீவனுள்ள காட்சிகள் என்று அர்த்தம். இதிலும் அப்படியே — கடைசிக் காட்சிகளில் கண்கள் பனித்துப் போகின்றன.

— ஜெயமன்மதன்.



# 20

ஷியாம் தவித்தான். பதற்றப்பட்டான். இது எதிர்பாராத அதிர்ச்சி. சீட்டுக் கட்டின் கோபுரம் ஒரே ஊதலில் சாயும் ஏமாற்றம்!

எங்கே போயிற்று அந்த டாக்குமெண்ட்? இவன்தான் எடுத்து இடம் மாற்றி விட்டானா? எப்படி சாத்தியம்? சாவி என்னிடம். மாற்றுச் சாவி என் அறை பீரோவில். அதன் சாவியும் என்னிடம். ஏற்படுத்தித் தந்த சூழ்நிலையோ முன்னறிவிப்பில்லாதது. எப்படிச் செயல்பட்டான்? அந்த இருபத்தி ஐயாயிரம் ரூபாய்க்கான டிராஃப்ட்டையும் காணோமே...

''என்ன மிஸ்டர் ஷியாம் குழப்பம்?'' எனக் கேட்ட இன்ஸ்பெக்டர் ராமநாதன், ''நீங்க சொன்ன ஸ்டேட்மெண்ட் பொய்யா?'' என்று இழுத்தார்.

''இல்லே சார். உண்மை!''

''நிவிதா வெளியேறினதும் நீங்க டிராயரைப் பூட்டிக்கிட்டு நேரா என்கிட்டே வந்தீங்க. அப்படித்தானே?''

''ஆமாம்!''

''இந்தாப்பா வாட்ச்மேன்!''

''என்னங்க சார்?''

''நிவிதா ஓவர்டைம் முடிச்சிட்டு வெளியே போனதும், அதுக்கப்புறம் மேனேஜர் சார் போனாரில்லையா?''

''ஆமாம் சார்.''

''மறுபடி நிவிதா ஆபீசுக்குள்ளே வந்தாங்களா?''

''இல்லே சார். இப்ப உங்களோட வர்றது தான்.''

''சரி. நீ போ. மிஸ்டர் ஷியாம், இங்க ஏதோ இல்லு முல்லு செஞ்சு டாக்குமெண்ட்சை மறைச்சிட்டதா நீங்க சொல்றது எந்த வகையிலயும் பொருத்தமா இல்லையே..

ஷியாம் மௌனமாக நின்றான். தாடையின் நரம்புகள் அசைய நின்றான். குற்றம் சுமத்தி அவன் கூசிக் குறுகுவதைக் கண்டு களிக்க நினைத்திருந்த வேளையில், தன்னையே கூசி நிற்க வைத்து விட்ட அவமானத்தில், ஆத்திரத் தகிப்பில் கண்கள் சிவக்க நின்றான்.

'ஒரு மணி நேரத்தில் வருகிறேன், யோசித்து முடிவு செய்து வை' — என்று சொல்லி விட்டுச் சென்ற போதே இவன் குறுக்கு யோசனை செய்திருக்கிறான். திரும்பி

## ஆகவே, செக்ஷன் 302 படி...

வருவதற்குள் தன் சாமர்த்தியத்தைக் காட்டி விட்டாள்.

இதை எப்படி நான் சொல்ல முடியும்?

என்ன சார், இப்படிப் பேசாமல் நின்னா என்ன அர்த்தம்?''

''திருடனுக்குத் தேள் கொட்டிடுச்சின்னு அர்த்தம். இன்ஸ்பெக்டர், அவர் என் மேல் சுமத்தின குற்றச்சாட்டு பொய்யானதுன்னு முடிவுக்கு வந்திருப்பீங்கன்னு நினைக்கிறேன்'' என்றாள் நிவிதா.

''அஃப் கோர்ஸ்.''

''ஏற்பட்ட குழப்பத்துக்கு உண்மையான காரணத்தை நான் சொல்லலாமா?''

''சொல்லுங்க!''

''நம்பாதிங்க. பூராவும் பொய்'' என்று அவசரமாகக் கத்தினான் ஷியாம்.

''அவங்க இன்னும் சொல்லவே இல்லையே. உங்க வார்த்தைகள் மேல் மரியாதை வச்சுப் புறப்பட்டது தப்பு. கொஞ்சம் அமைதியாக இருங்க. மேடம், நீங்க சொல்லுங்க.''

நிவிதா சொல்லாமல் ஷியாமைப் பார்த்தாள். அவன் தவிப்பை, அவசர நகக் கடிப்பை ரசித்தாள்.

''சார், கொஞ்ச நாளா எனக்கும் எங்க மேனேஜரான இவருக்கும் நடுவிலே ஒரு சின்ன மோதல். நான் சகஜமா எடுத்துக்கிட்டேன். ஆனா அதை இவர் வன்மமா எடுத்துக்கிட்டிருக்கார்ன்னு இப்பதான் தெரியுது. என்னை ஏதோ ஒரு விதத்திலே போலீஸ்ல மாட்டி வச்சு அவமானப்படுத்தறேன்னு இவர் இன்னொருத்தர்கிட்டே சொன்னது என் காதுக்கு வந்துச்சு. இன்னிக்கு அழகா ஒரு நாடகமாடி அதைச் செயல்படுத்த முயற்சி செஞ்சிருக்கார். இவர் என்னைச் சந்தேகப்பட்டு என் ஹேண்ட்பேகைக் கேட்டதாகவும், எடுத்துத் தந்ததாகவும், அதுக்குள்ளே டாகுமெண்ட்ஸ் கவர் இருந்ததாகவும் சொன்னதெல்லாம் கற்பனை. உங்களை வரவழைக்கிறதுக்காகச் செய்யப்பட்ட கற்பனை. ஹாஸ்டல்ல அத்தனை பேர் முன்னிலையிலே நீங்க விசாரிக்க என்னை இங்கே அழைச்சிட்டு வந்ததே ஒருவகையிலே என்னை அவமானப்படுத்தின மாதிரி தானே... இப்போ ஹாஸ்டல்ல உள்ள எல்லாரும் என்னைப் பத்தி எப்படி, எப்படி எல்லாம் கற்பனை கலந்து பேசுவாங்க... அதிலே இவருக்கு ஒரு திருப்தி.''

ராமநாதன் கடுகடுப்பாக ஷியாமைப் பார்த்து, ''இவங்க சொல்றதெல்லாம்...'' என்றார்.

ஷியாம் மறுப்பதா இல்லை ஆமோதிப்பதா என்று புரியாமல், ''இல்லை, வந்து...'' என்று திணறினான்.

நிவிதா மார்புக்குக் குறுக்கே கைகளைக் கட்டிக் கொண்டு, ''சார், எந்த டாகுமெண்ட்சை நான் திருடி வச்சிருக்கேன்னு சொல்றாரோ... அதை அவரே எடுத்துப் பழி போடறதுக்காகவே மறைச்சு வச்சிருக்கணும்ங்கிறது என் யூகம். அவர் ரூம்ல சோதனை போட அனுமதிக்கிறாரான்னு கேளுங்க'' என்றாள்.

''வாட் நான்சென்ஸ். அந்த டாகுமெண்ட்டைத் திருடி இவ வச்சிருக்கான்னு சொல்றேன். என் ரூமிலே எப்படிக் கிடைக்கும்?'' என்று பதறினான்.

''பார்த்துடலாமே'' என்றார் இன்ஸ்பெக்டர்.

ஷியாம் கடுமையானான். மேலும் மேலும் என்னைத் தலை குனிய வைக்க இந்த விஷமக்காரி என்னென்னவோ செய்து வைத்திருக்கிறாள். தன் மேஜை டிராயரில் இருந்து அப்புறப்படுத்தியிருக்கிறாள். அதையே என் அறைக்குள் எங்கேயோ வைத்திருக்க வேண்டும். இப்போது அதை எடுத்துக் கொடுப்பாள். நான் அவள் மீது அபாண்டமாகப் பழி சுமத்தியதாக ஊர்ஜிதம் செய்யப் பயன்படுத்திக் கொள்வாள்.

''தேவையில்லை இன்ஸ்பெக்டர். நிவிதா மேல் நான் சுமத்தின குற்றச்சாட்டை வாபஸ் வாங்கிக்கறேன். நீங்க போகலாம். எங்க விவகாரத்தை நாங்களே தீர்த்துக்கறோம்.''

''மிஸ்டர், நீங்க வான்னா வரணும். போன்னா போகணுமா? உங்க வீட்டு வேலைக்காரன்னு நினைச்சீங்களா? கௌரவமான ஆள்னு மதிச்சுப் புறப்பட்டு வந்து பார்த்தா இவ்வளவு சீப்பா இருக்கீங்களே.. உங்க பர்சனல் தகராறுக்காக ஒரு அப்பாவிப் பொண்ணு மேல திருட்டுப் பழி போடறீங்களே... படிச்சவர்தானே நீங்க? இவ்வளவு பெரிய ஆஃபீஸோட மேனேஜர்! நாகரிகமா நடந்துக்கத் தெரியலையே...''

ஒவ்வொரு வார்த்தையும் சாட்டைச் சொடுக்கின மாதிரி அறைந்தது. அப்படியே அசையாமல் இருந்தான்.

''வாங்க மேடம், எது இவர் ரூம்?''

''வேணாம் சார். அவர்தான் என் மேல் பொய்யா குற்றம் சுமத்தினதா ஒப்புக்கிட்டாரே?.. அது போதும். நீங்க புரிஞ்சுக்கிட்டா போதும்.''

''ஸாரி மேடம், எந்தக் குற்றச்சாட்டா இருந்தாலும் விசாரிக்க வேண்டியது எங்க கடமை. அதனால்தான், இவர் சொன்ன குற்றச்சாட்டை நம்பி உங்களை இங்கே அழைச்சுக்கிட்டு வந்தோம்.''

''பரவாயில்லை சார். எனக்கு ஒரு சட்ட விளக்கம் வேணும்.''

''என்ன, சொல்லுங்க?''

''தேவையில்லாம என்னை அவமானப் படுத்தியிருக்கிற இவர் மேல் நான் மான நஷ்ட ஈடு வழக்கு போட முடியுமில்லையா?''

''தாராளமா.''

''அப்படிப் போடறதுன்னா சாட்சிகள் தேவைப்படும்னுதான் என் தோழிகள் இவங்களைக் கூட்டிட்டு வந்தேன். நீங்களும் சாட்சி சொல்வீங்களா இன்ஸ்பெக்டர்?''

''ஷ்யூர். அவசியப்பட்டா சொல்வேன்.''

''தேங்ஸ். நாங்க போகலாமா?''

''போகலாம்.''

நிவிதா புறப்படும் முன்பு ஷியாம் அருகில் வந்து, ''ராத்திரி தூங்கி எந்திரிக்கிறப்போ புது மனுஷனா எந்திரிங்க'' என்றாள். நடந்தாள்.

''ஏன்னடா நடந்துச்சு?'' என்றான் தீபக். அப்படியே அசையாமல் நாற்காலியில் அமர்ந்திருந்த ஷியாமைத் தோள் தொட்டு அசைத்தான். அசையவில்லை. வெறித்த பார்வையில் மாற்றமில்லை. இறுகின உதடுகள் பிரியவில்லை.

இரண்டு கைகளையும் தட்டினான் தீபக். ''ஹலோ! உன்னைத்தான்ப்பா! சென்று வா, வென்று வா—ன்னு வாழ்த்தி அனுப்பினேன். என்ன ஆச்சு? தெரிஞ்சுக்கலாம்னு



வந்து பார்த்தால் ஒரு கையில் விஸ்கி, ஒரு கையிலே சிகரெட்டுன்னு வச்சிக்கிட்டுப் பேயடிச்சவன் மாதிரி இருக்கியே.. சொல்லேன்ப்பா''

பிரமையில் இருந்து விடுபட்ட ஷியாம், கிளாஸைக் காலி செய்து விட்டு, சிகரெட் சாம்பலைத் தட்டி விட்டு, ''என்ன கேட்டே?'' என்றான்.

''ஆயிரம் ரூபாய் கடன் கேட்டேன்.''

''என்னது?''

''பின்னே என்ன? ஆஃபீஸ்ல என்ன நடந்துச்சு? ஜெயிச்சியா இல்லையா?''

''இல்லைடா!''

''இல்லையா? பின்னே?''

''தோல்வி! படு படு தோல்வி! என்னென்னமோ நடந்து போச்சு தீபக்.''

''விவரமாச் சொல்லேன்.''

''என்னோட வலையிலேர்ந்து அவ மீளவே முடியாதுன்னு இருமாப்பா போனேன். உன்னால முடிஞ்சதைப் பார்த்துக்கோ, சம்மதிக்க முடியாதுன்னுட்டுப் போய்ட்டா.''

''அப்புறம்?''

அப்புறம் நடந்ததை நான்கு சிகரெட்டுகள், மூன்று கிளாஸ் விஸ்கி மத்தியில் எதையும் விடாமல் விரிவாகச் சொல்லி முடித்தான் ஷியாம்.

''மை காட்! இவ்வளவு தூரம் அவமானமாப் போச்சா?''

''நான் எதிர்பார்க்கவே இல்லை தீபக். முக்கியமான, ஆதாரமான அந்த டாகுமெண்ட் விஷயத்தை இப்படி உடைச்சதும் நான் வெலவெலத்துப் போய்ட்டேன். வார்த்தையே வரலை. டிராஃப்ட்டையும் காணோம். என் பேச்சு பூரா பொய்யின்னு ஆய்டுச்சி. அதுக்கு மேலே போலீஸ்கிட்டே நான் எதைச் சொல்றது, எப்படிச் சொல்றதுன்னே புரியலை.''

''எப்படி செஞ்சா ஷியாம்?''

''அதான் எனக்கும் புரியலை.''

''எனக்கே ஒரே கொதிப்பா இருக்கு. உனக்கு எப்படி இருக்கும்?''

''எக்கச்சக்கமா இருந்தது. இப்ப கொஞ்சம் அடங்கிடுச்சி தீபக். அவ உடம்பு மட்டும் தான் என் நோக்கம்னு பலாத்காரம் அதை கிடைக்கச் செய்திருக்கும். ஆரம்பத்திலேர்ந்தே இது ஒரு மூளைப் போர்! என் புத்திசாலித்தனத்தை வச்சு மடக்கணும்னு தான் சிரமம் எடுத்துக்கிட்டேன். அவ தன் புத்திசாலித்தனத்தைக் காட்டிட்டா, ஸோ, பந்தயத்திலே தோல்வி. அதே சமயம் அவ புத்திசாலித்தனத்துக்கு நான் சல்யூட் அடிக்கணும் இல்லையா?''

அவனை ஆச்சர்யமாகப் பார்த்தான் தீபக்.

''நீ தானா பேசறது ஷியாம்? பயங்கரமா ஆத்திரப்படுவேன்னு நினைச்சா, பாராட்டு விழா நடத்தறியே... நேருக்கு நேர் கூடப் பாராட்டுவே போலிருக்கே...''

''என்ன தப்பு? விளையாட்டிலே ஜெயிச்சவனைத் தோற்கிறவன் பாராட்டறதில்



''என் மனைவி மிக்ஸி ஒண்ணு வாங்கித் தரச் சொல்லிக் கேட்டா இன்னும் வாங்கிக் கொடுக்கலை....''

''அதனால என்ன...?''

''இதனால் அவ சமைச்சது எதைச் சாப்பிட்டாலும் வயித்துக்குள்ளே மிக்ஸி ஓடற மாதிரியே இருக்கு!''

— சேத்தூர் அன்பழகன்.

---

லையா? இதுவும் ஒரு மாதிரி விளையாட்டுத் தானே? நேருக்கு நேர் நிச்சயம் பாராட்டத் தான் போறேன். போனை எடு''

''என்ன செய்யப் போறே?''

போனை வாங்கி மடியில் வைத்துக் கொண்டு, எண்களை லேசான தடுமாற்றத்துடன் சுழற்றி, ''ஹலோ, மிஸ் நிவிதாவைப் பேசச் சொல்லுங்க. நான் அவங்க ஆஃபீஸ் மேனேஜர் பேசறேன்னு சொல்லுங்க'' என்றான்.

சில வினாடிகள் கழித்து, ''ஹலோ, நிவிதா பேசறேன்'' என்று குரல் ஒலித்தது.

''ஹேட்ஸ் ஆஃப் டு யு நிவிதா. நீங்க என்னை ஜெயிச்சிட்டிங்க. என் திமிரை, ஆணவத்தை, பொம்பளைங்க மேல வச்சிருந்த இளக்காரத்தை, ஈகோவை எல்லாத்தையும் ஜெயிச்சிட்டிங்க. நம்புங்க. எனக்கு உங்க மேல இப்போ கோபமோ, ஆத்திரமோ எதுவும் இல்லை. சின்சியரா மன்னிப்பு கேட்டுக்கறேன். நான் நடந்துக்கிட்டது ரொம்ப கீழ்த்தரமான முறை. கேவலமான முறை. இன்ஸ்பெக்டர்கிட்டே அந்த அசிங்கம் எதையுமே சொல்லாம விட்டதே உங்க பெருந்தன்மையைக் காட்டுது. இப்ப நான் தண்ணி போட்டுட்டுப் பேசறேன். சிந்தனை தெளிவா, நிர்மலமா இருக்கு. தோல்வியை ஒப்புக்கிற, மன்னிப்பு கேக்கற பக்குவம் கிடைச்சிருக்கு. அவ்வளவு சுலபமா என்னை உங்களால மன்னிக்க முடியாது. ஆனா, ப்ளீஸ் ட்ரை பண்ணுங்க. எனக்கு ஏதாச்சும் தண்டனை தரணும்னு நினைச்சாலும் யோசிக்க வைங்க. ஐ டிசர்வ் இட்! நேர்ல இவ்வளவு பேச நாக்கு எழும்பாது. அதனாலதான் போன்ல பேசறேன். நீங்க சொன்ன மாதிரி காலைல நான் புது மனுஷன்தான். ஓவர் நைட் எனக்குப் பல சித்தாந்தங்களைப் புரிய வச்சிருக்கீங்க. தாங்க்ஸ் டு யூ. தயவு செஞ்சு என்னைக் கொஞ்சமாவது தண்டியுங்க. அப்புறம் மன்னியுங்க! குட் நைட்!'' என்று வைத்த ஷியாமைக் கண் கொட்டாமல் பார்த்தான் தீபக்.

(தொடரும்)



# ஜெ. சொற்படி கேட்டுத்தான் ரா. நடந்து கொண்டாராமே?



* ஆர். சுப்பராவ், திருக்கோவலூர். *

? இத்தனை பேபார்சாக போஃபோர்ஸ் ஊழலை விசாரணை செய்து முடித்த சங்கரானந்துக்குப் பத்மபூஷண் விருது கிடைக்குமா?

! ஏன், அதைவிடச் சிறப்பாக ஸ்விஸ் நாட்டுத் தூதுவர் பதவி கொடுக்கலாமே!

* ஆர். சாந்தகுமாரி, சீர்காழி.

? 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் பெண்களின் பெயருக்கே வீட்டு மனைப்பட்டா, கடன் தொகை வழங்குவோம்' என்று பண்ருட்டி கூறியிருக்கிறாரே?

! தாய்க் குலத்தின் வோட்டுக்களை ஒட்டு மொத்தமாக வாரிக் குவித்து விடலாம் என்ற ஆசையில் பேசுகிறார். 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் தகுதி உள்ளவர்களுக்கு வீட்டு மனைப் பட்டா, கடன் தொகை வழங்குவோம்' என்று தான் அமைச்சராக வர நினைக்கும் ஒருவர் கூற வேண்டுமே தவிர, ஆண் பெண் என்ற பாகுபாடு அபத்தமானது. எத்தனையோ அபத்தங்களில் ஒன்று.

* ராமாபுரம் சந்துரு, சென்னை — 59.

? தமிழக ஆளுனர், மேடையில் தமிழில் பேச முயற்சி செய்ய, நமது ஜனாதிபதியோ, தமிழக மேடைகளில் கூட ஆங்கிலத்தில் பேசுகிறாரே?

! அவர் ஹிந்தியில் பேசாமலிருப்பதற்காக நன்றி செலுத்துங்கள்!

* சி. குமரன், புதுக்கோட்டை.

? 'காங்கிரஸை இந்தியாவை விட்டே வெளியேற்றுவோம்' என்று சபதம் பூண்டிருக்கிறாரே, சிவாஜி?

! கால் நூற்றாண்டு காலம் அவர் வளர்த்த கட்சி; அவருக்கில்லாத உரிமையா?

* ஆர். ஜெயபாலன், மாமல்லபுரம்.

? எம். ஜி. ஆரின் சத்துணவுத் திட்டம், ஊழல்கள் பெருகக் காரணமாயிருந்த திட்டம். — இதை நீங்கள் ஒப்புக் கொண்டு பதில் சொல்லப் போகிறீர்களா, இல்லையா?

! காமராஜரின் மதிய உணவுத் திட்டத்தின் விரிவாக்கம்தான் சத்துணவுத் திட்டம். முன்னதில் உள்ளூர் மக்களின் பங்கு இருந்தது. பின்னது அரசாங்க யந்திரத்தால் நிறைவேற்றப்படுவது. திட்டம் மோசமானது அல்ல என்பதுடன் அவசியமானதும் கூட. காரணங்கள் பலமுறை விளக்கப்பட்டு உள்ளன. அமுல் படுத்தப்படும் விதத்தில் குறைகள் உள்ளன. இதனை மனமிருந்தால் எளிதாகச் சீர் செய்ய முடியும். இதற்கான யோசனைகளும் தெரிவிக்கப்பட்டுள்ளன. கேட்பாரைத்தான் காணோம்!

* எஸ். ராஜா, அயன்புரம்.

? 'தனித்துப் போட்டியிட்டால் காங்கிரஸுக்கு டெபாஸிட் கூடக் கிடைக்காது' என்று கூறிவரும் ஜெயலலிதா, அக்கட்சியுடன் கூட்டணி அமைக்கத் துடிப்பது ஏன்?

! 'காங்கிரஸுக்கு டெபாஸிட்டாவது கிடைக்கச் செய், கைவிட்டு விடாதே!' என்று எம். ஜி. ஆர். அன்றைக்கே ஜெயிடம் ஏதாவது சத்தியம் வாங்கிக் கொண்டாரோ என்னவோ!

* க. மதிவாணன், கடலூர்.

? அமைச்சராகப் பதவி ஏற்கு முன் அனைத்து சொத்து விவரங்களையும் பகிரங்கமாக அறிவித்துவிட்டுத் தொடர்ந்து ஆறு

## நீங்கள் கேட்டவை — தராசு

மாதங்களுக்கு ஒரு முறை சொத்து விவரம் வெளியிட வேண்டும் என்ற நடைமுறையைக் கொண்டு வந்தால் என்ன?

! ஏ. இ. சர்வீஸஸ், பிட்கோ, மாரெஸ்கோ, ஸங்கம், ஸ்வென்ஸ்கா என்று ஏதோ ஒரு பெயரில் பணம் பண்ணிவிட்டுப் போகிறார்கள்! என்னய்யா, விஷயம் புரியாதவராய் இருக்கிறீரே? இருபத்தோராம் நூற்றாண்டுக்கு வாருங்கள்!

* சு. தியாகராஜன், நெய்வேலி.

**? ரயில் கட்டண உயர்வால் 20,000 டன் உப்பு வேதாரண்யத்தில் தேங்கிக்கிடப்பதைப் பற்றிக் கவலைப்படாமல், பாத யாத்திரை போவதால் என்ன பயன்?**

! நாளிதழ் விளம்பரங்கள் மூலமாக அரசுச் செலவில் மறைமுகமாகக் காங்கிரஸ் கட்சிக்கு விளம்பரம் போட முடிந்தது. பத்திரிகைச் செய்திகள் மூலமாகவும் பிரபலமடைய முடிந்தது. இதெல்லாம் பயன் இல்லையா? இந்தப் பெரிய பலன்களை விட்டுவிட்டு உப்புப் பெறாத விஷயத்துக்கா கவலைப்பட முடியும்!

* சு. நக்கீரன், குடியேற்றம்.

**? 'அட்மிஷனுக்குப் பணம் வாங்கும் கல்வி நிறுவனங்கள் மீது ஜனாதிபதி, கவர்னர் கடும் தாக்கு!' — இவர்களிடம்தான் பதவி உள்ளதே; நல்லதொரு சட்டம் இயற்றலாம் அல்லவா?**

! சட்டம் போட்டால் சட்டத்திலுள்ள ஓட்டைகளைப் பயன்படுத்திப் பணம் பண்ணுவார்கள். நம் கொடை என்பார்கள் அல்லது வேறு ஒரு பெயரிட்டு அழைப்பார்கள். அரசியலே ஒரு வியாபாரமாகிப் போன பிறகு, கல்வித் துறையில் வியாபாரம் புகுவதை எப்படித் தடுக்க முடியும்? ஆட்சியில் உள்ளவர்கள் எல்லாருமே தியாகச் செம்மல்களா? இன்னும் சொல்லப் போனால் இங்கு நடப்பதே ஜனாதிபதி ஆட்சிதானே? கவர்னர் அவர் பிரதிநிதிதானே? நிலைமையைச் சீர்திருத்தலாமே? ஏதோ, ஆர். விக்குத் தம்மை ஒரு சர்வாதிகாரியாகச் சில விநாடிகளுக்கேனும் கற்பனை செய்து கொண்டு பார்த்த திருப்தி கிடைத்தது. அவ்வளவுதான்! அரசுப் பள்ளிகள் எல்லாம் உயர்தரமாக நடந்தால் தனியார் பள்ளிகளுக்கு மவுசு குறைந்து விடும். ஆனால் அது நடக்கவா போகிறது?

* அப்துல் மஜீத், திருமயம்.

**? ஜானகி ஒரே மேடையில் கருணாநிதியுடன் அமர்ந்திருந்து பேசியது பற்றி?**

! அரசியலில் கருத்து மாறுபாடுகள் இருந்தாலும் இருவருக்கும் பொதுவான ஆர்வமுள்ள வேறு துறை சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் ஒரே மேடையில் அமர்ந்திருந்து பேசுவதும் பாராட்டுவதும்தான் நாகரிகம். இதைக் கூட அசிங்கப்படுத்த முயல்வது அக்கிரமம்.

* எம். சுப்பிரமணியம், சென்னை — 15.

**? 'வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க வேலை நேரத்தை எட்டு மணி நேரத்திலிருந்து ஆறு மணி நேரமாகக் குறைக்கலாம்' என்ற கருணாநிதியின் பேச்சு குறித்து...?**

இரண்டு மணி நேர உற்பத்தி குறைவது தான் நிகர லாபமாயிருக்கும். வேலை வாய்ப்பு பெருகவே செய்யாது. இது நல்ல யோசனை அல்ல.

* கே. ஜி. எஸ். பழனிச்சாமி, பெங்களூர்.

**? தாம் கேட்டுக் கொண்டதற்கிணங்கத்தான் ஐம்பத்தொன்பதாவது சட்டத் திருத்த மசோதாவை (எமெர்ஜென்ஸி) பஞ்சாபில் மட்டும் பயன்படுத்த ராஜீவ் ஒப்புக் கொண்டார் என்று ஜெயலலிதா தம்பட்டம் அடித்துக் கொள்வது பற்றி?**

! ஹூம், இதுமட்டுமா? ஆப்கானிஸ்தானத்திலிருந்து ரஷ்யப் படைகள் வாபஸானது கூட கார்பசேவை ஜெயலலிதா கேட்டுக் கொண்டதன் விளைவுதான்; நமக்குத் தெரியாதா, என்ன!

* சாகர் * சர்வாதிகாரியானல்....







* வாரிக் குவிக்க....



* ரூ. 15 பரிசு பெறுபவர்:

ஆர். சுப்பராவ்,
94, கீழ வீதி,
திருக்கோவலூர்
— 605 757.



# பக்தி

## புத்தகங்களைப் படியுங்கள்

உங்கள் வாழ்க்கையில் ஒரு நாளாவது கீழ்க்கண்ட பக்தி புத்தகங்களில் உள்ள நல்ல கருத்துக்களைப் படித்துப் பாருங்கள்.

1. பகவத்கீதை
2. திருவாசகம்
3. ஸ்ரீருத்ரம்
4. லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம்
5. காயத்ரீ
6. விவாக மந்திரம்
7. விஷ்ணுபுராணம்
8. தேவி பாகவதம்
9. சிவ மஹா புராணம்
10. ஸ்ரீ கந்த புராணம்

எங்களிடம ஸ்வீட் அல்லது காரம் வாங்குபவர்களுக்கு பகவத் கீதை புத்தகமும், மற்றும் அது போன்ற நல்ல (ஆங்கிலம் அல்லது தமிழ்) புத்தகங்களும் வாங்கும் தொகைக்கு ஏற்றாற் போல இலவசமாக வழங்கப்படும்.

அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்குகளை வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.



திருமண வைபவங்களுக்கு:— சீர்முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன் குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால், அப்பம் முதலியவை செய்து தரப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு, காந்திநகர், அடையாறு
சென்னை-600 020. போன்:-412557

# கௌரவம் திரவு ஆசை...!

—எஸ். பாலகிருஷ்ணன்

அலுவலகத்தின் மதிய உணவு இடை வேளை நேரம்.

''ஸார்! கூப்பிட்டீங்களாமே...?'' — பவ்ய மாய்க் கேட்டான் ஸீனியர் ஸிஸ்டம் அனலிஸ்ட் ரவி.

''உட்காரப்பா.... உன்கிட்டே ஒண்ணு கேட்கலாமேன்னுதான் வரச் சொன் னேன்!'' என்றார் சங்கர் — கம்ப்யூட்டர் சென்டரின் ஸீனியர் மானேஜர்.

'என்னவாய் இருக்கும்...? காலையில் எழுதிக் கொடுத்த ப்ரோகிராமில் ஏதேனும் தவறு இருந்து... 'ஏம்ப்பா நாலு வருஷமா ப்ரோகிராம் எழுதறியே, இப்படியா எழுத றது...?' எனப் போகிறாரா? கீ பஞ்ச் ஆபரேட்டர் கௌசல்யாவோட நெருங்கிப் பழகறதைப் பற்றி இந்தக் குமார் ஏதாச்சும் வத்தி வைச்சு... 'உன்னைப் பற்றி ரொம்ப உயர்வா எண்ணியிருந்தேன், நீயா இப் படி...' என்பாரோ? 'ரவி! என்னோட மூணு பொண்ணுங்களையும் கலப்பு மணம் செஞ்சு கொடுத்த மாதிரி என்னோட நாலாவது பொண்ணை உனக்குத் தரலாம்னு நினைக்க றேன்...' என்று சொல்வாரா...? எண்ணங் கள் சிறகு கட்டிப் பறக்க எதிரே உள்ள நாற்காலியில் அமர்ந்த ரவி, ''சொல்லுங்க ஸார்!'' என்றான்.

''ரவி! இந்த கம்ப்யூட்டர் சென்டர் ஆரம் பிச்சு இதுக்கு நான் ஸீனியர் மானேஜரா வந்ததிலிருந்து இதுவரைக்கும் பன்னிரண்டு பேர் ரிஸைன் பண்ணிட்டுத் தங்களோட பெட்டர்மெண்டுக்காக வெவ்வேற கம் பெனிகளுக்குப் போயிட்டாங்க. நீயும் அவங்க மாதிரியே ஒரு ஸீனியர் ஸிஸ்டம் அனலிஸ்ட். நல்ல அற்புதமான திறமை சாலி. இன்னைக்குச் சிங்கப்பூரிலே மாசம் பதினஞ்சாயிரம் சம்பாதிக்கிற நாராயண் மாதிரியோ, அமெரிக்காவிலே இருபதாயி ரம் சம்பாதிக்கிற முரளி மாதிரியோ, ஆஸ்தி ரேலியாவிலே இருபத்தஞ்சாயிரம் சம் பாதிக்கிற அருணகிரி மாதிரியோ... நீயும் ஏம்ப்பா இந்த வேலையை ரிஸைன் செஞ் சுட்டு நல்ல வேலைக்குப் போகக் கூடாது...? நல்ல ஆஃபர் ஏதும் வரலியா...?''

''ஸார்! ஒரு நிமிஷம்...'' சொல்லிவிட்டு அறையை விட்டு வெளியேறிய ரவி, ஐந்து முழு நிமிடங்களுக்குப் பின் திரும்பிய போது...

அவன் கையில் கிட்டத்தட்ட பத்து கவர் கள்.

''என்னப்பா இதெல்லாம்...?''

''எனக்கு வெளிநாட்டிலிருந்து வந்த அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர்கள் ஸார்...!'' என்று சொல்லிக் கொண்டே கவர்களைச் சங்கரின் முன் வைத்தான் ரவி.

முதல் கவரைப் பிரித்தார் சங்கர். பாரி ஸிலிருந்து வந்த ஆர்டர்... இந்திய கணக்குப் படி மாதம் இருபத்தைந்தாயிரம் ரூபாய்



"அடுத்தபடியாக இன்னும் நிறைய பேச்சாளர்கள் பேச வேண்டியிருப்பதால் இனி பேசுபவர்கள் தயவு செய்து சோடாவை அதிகம் பயன்படுத்த வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்!"

— கடுவை கோபால்சாமி.



சம்பளம்!

இரண்டாவது கவர்... நியூயார்க்கி லிருந்து — மாதம் இரண்டாயிரம் டாலர்!.

மூன்றாவது... கலிஃபோர்னியாவி லிருந்து...!

"இவ்வளவு அருமையான ஆஃபர்கள் இருந்தும் நீ ஏம்பா இன்னும் ரிஸைன் பண்ணாமல் இருக்கே...?"

"காரணமாத்தான் ஸார்...!"

"அந்தக் காரணத்தை நான் தெரிஞ்சுக் கலாமா...?"

"ஸார்! இந்தக் கம்பெனியோட ஜென ரல் மானேஜர் ஒருவகையிலே எனக்கு உறவுக்காரர். ஆறு மாசத்துக்கு முன்னாடி ஒரு ஃபங்ஷனிலே சந்திச்சு அவர்கிட்டே பேசிட்டிருந்தப்போ, 'மத்தவங்க எல்லாம் அஞ்சு வருஷத்திலே டி.ஜி.எம். ஆறப்போ, எங்க ஸீனியர் மானேஜர் மட்டும் எட்டு வருஷத்துக்கப்புறமும் ஸீனியர் மானேஜ ராவே இருக்காரே, ஏன்'னு கேட்டேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா ஸார்...?"

"என்னப்பா சொன்னார்...?" சங்கரின் விழிகளில் ஆர்வம் ஒளிக்கீற்றாய் மின்னி யது.

"கம்ப்யூட்டர் சென்டருக்குச் சங்கர் ஸீனியர் மானேஜரா வந்த அப்புறம், ஒவ் வொரு வருஷமும் ஸீனியர் ஸிஸ்டம் அனலிஸ்டுங்க ரிஸைன் பண்ணிட்டு வெளியே போய்க்கிட்டே இருக்காங்க. அவங்ககிட்ட நயமாப் பேசி இந்த கம்பெனி யிலேயே தொடர்ந்து இருக்கச் செய்ய அவராலே முடியலே. அவர் ஓர் அறிவு ஜீவியா இருக்கலாம். ஆனால் அவர் ஒரு சிறந்த நிர்வாகி இல்லை... எந்த வருஷம் அவரோட டிபார்ட்மெண்டிலே இருந்து ஸீனியர் ஸிஸ்டம் அனலிஸ்டுங்களோட ராஜினாமா இல்லாம இருக்குதோ, அந்த வருஷம்தான் அவருக்கு டி. ஜி. எம். போஸ்ட் கிடைக்கும்'னு சொன்னார் ஸார்...!"

சில கணங்கள் ஆழ்ந்த மௌனம் நிலவி யது. பிறகு ரவி தொடர்ந்தான்:

"இப்ப டிபார்ட்மெண்டிலே இருக்கிற ஒரே ஸீனியர் ஸிஸ்டம் அனலிஸ்ட் நான் தான் ஸார். மத்தவங்க எல்லாம் புதுசா வந்திருக்காங்க. என்னைச் சிறந்த ஸிஸ்டம் அனலிஸ்ட்டா உருவாக்கின என் குருவான உங்களுக்கு, இந்த வருஷம் டி. ஜி. எம். போஸ்ட் கிடைக்கணும் என்கிறதுக்காக மட்டும் நான் ரிஸைன் பண்ணாம இல்லே. புத்தியில்லாதவனெல்லாம் ப்ரமோஷன் வாங்குகிற இந்தக் காலத்திலே, பல புத்தி சாலிகளை உருவாக்கிவிட்ட ஒரு அறிவா ளிக்கு, திறமைசாலிக்கு, அற்பக் காரணங் களால் ப்ரமோஷன் மறுக்கப்படற அநியா யத்தைத் தடுக்க வாய்ப்பிருந்தும், அதைச் சுயநலத்துக்காகக் காவு கொடுத்துட்டு வெளியே ஓடறவன் என்னைப் பொறுத்த வரைக்கும் ஒரு நன்றியில்லாத பிறவி. நான் அப்படிப்பட்ட பிறவியா இருக்க விரும்பலே ஸார்...! ரிஸைன் பண்ண விருப்பமில்லாத வன் வெளியே ஏன் அப்ளை செய்யணும்னு நீங்க நினைக்கலாம்?.. என்னோட திறமை வளர்ந்திருக்கான்னு தெரிஞ்சுக்கவும், மார்க் கெட்டிலே அந்தத் திறமையோட மதிப்பு என்னன்னு அறிஞ்சுக்கவும் தான் வெளி நாட்டு நிறுவனங்களுக்கு அப்ளை பண்ணி னேன்!"

ரவி சொல்லி முடித்த போது... விழி களில் ஈரம் பளபளக்க அவனது கைகளைப் பற்றிக் கொண்டார் சங்கர்.



"என்னப்பா இந்த வருஷம் சிறந்த டைரக்டருக்கான பரிசுக்கு உன்னோட பெயரைச் சிபாரிசு பண்ணியிருக்கோம். நீ என்னடான்னா இன்னும் படமே எடுக்காமலிருக்கிறியே....?"

— கடுவை கோபால்சாமி.

# அமரர் கல்கி

## நினைவுச் சிறுகதைப் போட்டி–1988

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 வீதம் | ரூ. | 750 |



ஆக மொத்தம் ரூ. 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

• கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

• அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

• நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.**

• உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

• பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

• கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

• எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

• சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

• போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

• எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி, சென்னை— 600 032.**

கார்னேசன் ஜுவல்லர்ஸ் ஸ்தாபனத்தார் வழங்கும்

## சிறப்புமிகு புதிய பரிசுத் திட்டம்

புதிய குரூப்புகள்

வெற்றிகரமாக செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

| மாதம் | 25 மாதம் | வட்டி | மொத்தம் |
|---|---|---|---|
| ரூ. 100 | 2500 | 350 | 2850 |

| | |
|---|---|
| முதல் பரிசு: ரூ. | 10,000 |
| 2-வது பரிசு ரூ. | 5,000 |
| 3-வது பரிசு ரூ. | 3,500 |

பரிசு கிடைத்த அன்றே

தங்க வைர நகைகளாக கொடுக்கப்படும்.

புதிய டிஸைன் தங்க நகை, வைர நகை, வெள்ளி
பாத்திரங்களுக்கு நம்பிக்கையான ஸ்தாபனம்
விபரங்களுக்கு நேரிலோ அல்லது தபால் மூலமோ தொடர்பு
கொள்ளவும்

## கார்னேசன் ஜுவல்லர்ஸ்

தெற்காவணி மூல வீதி, (Y.M.C.A. சமீபம்)

மதுரை. போன்: 30108

A/c

கண்ணன்

## தடையற்ற தண்ணீர் கிடைக்க

A Product of
**DLF UNIVERSAL LIMITED**
American Universal Division
6, அவின்யூ ரோடு
நுங்கம்பாக்கம்,
சென்னை -34
போன் : 477942



சுஜாதா

# 7



சோமசேகர் டெலிபோனை எடுத்து "எஸ்" என்றார்.

"ஸார், யாரோ டாக்டர் ராம்பிரகாஷ் உங்களுடன் பேசணுமாம் — கோபத்தில் இருக்கிறார்."

"அப்படியா, கொடு" என்றார் புன்னகையுடன். "ஹலோ டாக்டர், போலீஸ் மேலே, கோபமா இருக்கீங்களாமே?"

"இல்லே, உங்க மேலே!"

"அப்படியா, என்ன காரணம்?"

"இன்னிக்கு 'மிட்டே' பார்த்தீங்களா?"

"இல்லே, பார்க்கலே. அதில் செய்தி வந்திருக்கா?"

"ஆமாம் மிஸ்டர் சோமசேகர். இந்தச் செய்தியை யார் கொடுத்தாங்க? நீங்க தானே?"

"இல்லே. பத்திரிகைக்காரங்களுக்குன்னு

# இருள் வரும் நேரம்

கமிஷனர் ஆபீஸில வழக்கமாக போலீஸ் ப்ரீஃபிங் உண்டு. அப்ப இந்தச் செய்தி கொடுத்திருக்கலாம். என்ன செய்தி? எப்படி வந்திருக்கு?"

"எல்லா விவரமும் வந்துள்ளது. என் பேரு. அம்ருதா பேர். — ஏன் ஸார், உங்களால லா அண்ட் ஆர்டரைத்தான் சரியாப் பாதுகாக்க முடியலே. இந்த அவமானத்தையாவது தடுத்திருக்க முடியாதா? இந்த தேசத்திலே எதுவுமே புனிதமானது இல்லையா? என்னைக் கேட்டிருக்க வேண்டாமா, ஒரு வார்த்தை. இந்த மாதிரிச் செய்தி போடலாமான்னு?"

"உங்களுக்கு வேண்டாம்னு நீங்களே கூடச் சொல்லியிருக்கலாமே டாக்டர்."

"ஒரு பொறுப்புள்ள போலீஸ் அதிகாரி கிட்டேயிருந்து வர்ற பதிலாய்யா இது?"

"எந்த வார்த்தை வரணும். சொல்லுங்க."

டாக்டர் வெறுப்புடன், "சே, நீங்க எல்லாருமே ஒரே ஜாதி! — மார்பிட்!" என்றார்.

"வாட் டு யூ மீன் டாக்டர்?"

"உங்களுக்கும் இந்தச் சம்பவத்தில ஒரு குரூரமான சந்தோஷம்னு தோணுது!"

சோமசேகரின் மூக்கு நுனி துடித்தது. சற்றே சிவந்தது. "இந்த வார்த்தையை வேற யாராவது சொல்லியிருந்தா போனை வெச்சுட்டு நேர்ல வந்து ஒரு அறை அறைஞ்சிருப்பேன்!"

"உங்களுக்குத் தெரிந்தது அது ஒண்ணு தானே! மற்றபடி நாகரிக விஷயங்கள் எதுவுமே தெரியாதே, உங்களுக்கு." சோமசேகர் மௌனமாக இருக்க, "மிஸ்டர் சோமசேகர், இந்தக்கேஸை நீங்க விசாரித்தது போதும். உங்களுக்கு எந்த விதத்திலேயும் ஒத்துழைக்க நான் தயாரா இல்லே. ஆல் ஆப் யூ ஆர் மார்பிட்!" என்று முடித்தார்.

உங்களுக்குக் குற்றவாளி யாருன்னு கண்டுபிடிச்சு உங்க முன்னால நிறுத்த வேண்டாமா?"

"வேண்டாம். நீங்களே கண்டுபிடிச்சு மெடல் வாங்கிக்குங்க."

"ப்யூட்டிஃபுல்! டாக்டர், அந்தச் செய்தியை நான் இன்னும் பார்க்கலே. அது உங்களைப் புண்படுத்திருச்சுன்னா நான் மன்னிப்புக் கேட்டுக்கறேன். உணர்ச்சிவசப்பட்டுப் பேசாதீங்க. நீங்க என்ன சொன்னாலும் குற்றவாளியைக் கண்டுபிடிக்கத்தான் போறேன்."

"கோ பாயில் யுவர் ஹெட்", ராம்பிரகாஷ் டெலிபோன் இணைப்பை வெட்டினார்.

கோபத்தை அடக்கிக் கொண்டு, சோமசேகர், கான்ஸ்டபிளிடம், "ஒரு மிட்டே பேப்பர் கொண்டு வாங்க" என்றார்.

செய்தி விவரமாகவே இருந்தது.

பெங்களூர் மகுடமிட்டு, தேதி குறித்து —

**"இருபத்து ஐந்து வயது மனைவி வெள்ளிக்கிழமை இரவில் கபன் பூங்காவில் கற்பழிக்கப்பட்டார்.**

**திருமதி அம்ருதா ராம்பிரகாஷ் பஸ்ஸுக்காகக் காத்திருந்த போது இருவர் ஆட்டோ ரிக்ஷாவில் வந்து அவளைக் கணவரிடத்தில் கொண்டு செல்வதாக அழைத்துப் போய் பார்க்கில் பலாத்காரம் செய்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. கணவர் டாக்டர் ராம்பிரகாஷ் பெங்களூர் பல்கலைக்கழகத்தில் மனோதத்துவப் பிரிவில் ப்ரொபஸராக இருக்கிறார். உதவி கமிஷனர் சோமசேகர் இதை விசாரித்து வருகிறார்....**

சோமசேகர் பேப்பரை வைத்துவிட்டுத் தர்மராஜனை விளித்தார்.

"தமு டாக்டருக்குக் கோபம் — பேப்பர்ல விக்லி ப்ரீஃபிங்க்ல கொடுத்துட்டது..."

''அவரை க்யூ கேட்டிருக்கலாம் ஸார்.''

''யார்தான் கோவிக்கிறதுன்னு இல்லே!''

''பல்கலைக்கழக ஸ்டூடண்ட்ஸ் யூனியன், ஊர்வலம் வரப் போறாங்களாம்!

''எங்கே?''

''கமிஷனர் ஆபீசுக்கு. ரேடியோ தகவல் வந்திருக்குது.''

சோமசேகர் சிரித்துவிட்டு, ''சரி, வரட்டும். அசெம்பிளி செஷன்ல இருக்குது இல்லே?'' என்று கேட்டார்.

''ஆமா!''

''அங்கேயும் கேட்பாங்க. வெரிகுட்! கேஸை விசாரிக்கிறதைத் தவிர பாக்கி எல்லாம் செய்துக்கிட்டு இருக்கப் போறோம்! ஏதாவது உருப்படியாக் கிடைச்சுதா?''

''சிவாஜி தியேட்டர் பின்பக்கமா இருக்கிற ரவுடிங்களையெல்லாம் ஒவ்வொருத்தரா தட்டிக்கிட்டு இருக்கோம். அங்கேதான் ஒருத்தன் போன வருஷம் ஆப்ட்டான்.



பரீட்சை அதிகாரி: ஏம்மா ஒரு வரி கூட எழுதாமே உன் விடைத்தாளை வெள்ளையா அப்படியே திருப்பித் தர்றே...?

மாணவி: எல்லாம் நான் இன்னிக்குக் கட்டிக்கிட்டு வந்திருக்கிற வெள்ளைப் புடைவைக்கு மேட்சிங்கா இருக்கட்டுமேன்னுதான் ஸார்!

— எஸ். ராகவேந்திரா.

எம். ஓ. க்ரைமா இருக்கலாம்னு...''

''கேஸ் ரிஜிஸ்டர் ஆகியிருக்குது இல்லே?''

''டாக்டர் மறுப்பார், ரொம்ப கோபம் அவருக்கு.''

''இன்னமும் கோபப்படப் போகிறார். தர்மராஜன், நீங்க என்ன நெனைக்கிறீங்க?''

''...மகனை உங்க முன்னாலே ஒரு வாரத்தில் கொண்டு நிறுத்திடறேன் ஸார்!''

''ஆட்டோ ரிக்ஷாவில், டிரைவிங் ஸீட்டில் ரெண்டு பேரா வர்றவங்களையெல்லாம் நிறுத்தி விசாரிக்கச் சொல்லுங்க. ஏரியாவிலயே பீட்டில ஆள் போடுங்க. டராபிக்லயும் சொல்லி வையுங்க. ஏதாவது அடையாளம் கெடைச்சா நல்லது.''

''இதுவரைக்கும் இல்லே ஸார்.''

**''ஸா**ர் அந்தப் பேப்பரைக் கொடுங்க'' என்றார் கிருஷ்ணமூர்த்தி. பஸ்ஸில் போய்க் கொண்டிருக்கும் கசகசப்பில், முன்னால் பிரயாணி மடித்து வைத்திருந்த பேப்பரில் ''இளம் மனைவி. கபன் பார்க்கில் கற்பழிப்பு!''

''கொஞ்சம் இரு ஸார் நானே பார்க்கலே இன்னும்.'' குறைக்குறைய பேப்பரைப் பிடுங்கி அந்தச் செய்தியை மட்டும் படித்து விட்டுத் திருப்பிக் கொடுத்து 'தாங்ஸ்' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

''என்ன ஸார் லாட்டரியா?''

''இல்லே, கபன் பார்க்கில ஒரு பெண்ணைப் பலாத்காரம் பண்ணிட்டாங்களாமே நேற்றைக்கு!''

''எல்லா பேப்பர்லயும் வந்திருக்குதே ப்ரபஸர் பெண்டாட்டி!''

''அந்த ஆட்டோவை நான் பார்த்தேன் ஸார்!''

கிருஷ்ண மூர்த்தி வீட்டுக்கு வந்ததும் அதை, தம் மனைவியிடம் சொன்னார்.

''உங்களுக்கு பகல்லயே பசுமாடு தெரியாது. எதையாவது எக்குத்தப்பா பார்த்துட்டு எதையாவது கற்பனை பண்ணிக்காதீங்க!''

''இல்லே லலிதா, ஒரு ஆட்டோவில ஒரு பெண்ணை ஒரு மாதிரி வாயை அடைச்சுண்டு ரெண்டு பேர் போறாங்க. ஆட்டோ வேகமா கபன் பார்க்கில கச்சேரி கட்டடம் இல்லே, அதுக்கு எண்ட்ரன்ஸ் இருக்கு பாரு நடுவில, முன்னெல்லாம் பாண்டு வாசிப்பானே!''

''சொல்லுங்கோ.''

''அதுக்குள்ள வேகமா நுழையறது. அந்தப் பொண்ணுணு கீச்சு கீச்சுன்னு கத்தறது!''

''நீங்க எங்க அங்கல்லாம் போனீங்க. ஏன் அதை முன்னாலேயே சொல்லலே?''

''ஓவர்டைம் பார்த்துட்டு பஸ்ஸ்டாண்டுக்கு நடந்து போறேனா, என்னவோ வேடிக்கையா சிரிச்சு பேசிண்டு போறாளோன்னு முதல்ல தோணித்து. அந்தக் கத்தல், அழுகை மாதிரியும் இல்லே, சிரிப்பு மாதிரியும் இல்லே. இப்ப எல்லாம் யார் அழறா, யார் சிரிக்கறான்னு சொல்றதே கஷ்டமா இருக்கா?''

''இப்ப என்ன அதுக்கு?''

''போலீஸ்கிட்டச் சொல்ல வேண்டாமா லலிதா?''

லலிதா, கிருஷ்ணமூர்த்தியை நிமிர்ந்து பார்த்தாள்.

''அய்ய! என்ன விபரீத புத்தி உங்களுக்கு? சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தானாம்னு.''

''இல்லே. ஏதாவது ஒத்தாசையா இருக்கலாமேன்னு...''

''போலீஸ்ல சொன்னா அவா அடையாளம் கேப்பா. ஏதாவது சொல்லத் தெரியுமா உமக்கு?''

''ஆட்டோ ரிக்ஷா பின்பக்கத்தில ஏஸிடின்னு எழுதியிருந்தது. எதுக்கும் இருக்கட்டுமேன்னு நோட் பண்ணி வெச்சுண்டேன்!''

"உளறுறீங்கோ! போலீஸ்ல, 'எப்படி நோட் பண்ணிண்டே? இருட்டில் எப்படி கண்ணு தெரிஞ்சுது' ன்னு குறுக்குக் கேள்வி கேட்டு உங்களேயே அரெஸ்ட் பண்ணிடுவாங்க! பேசாம இருங்கோ!"

"அப்ப சொல்ல வேண்டாம்ங்கிறே!"

"உங்க வேலையை ஒழுங்கா பண்ணி மாசா மாசம் சம்பளம் வாங்கிண்டு வந்தா போதும்! மத்தவா வம்புக்கு எதுக்கு நாம போகணும்? போலீஸ்காரா எல்லாரும் கெட்டிக்காரா. அவா கண்டுபிடிச்சுடுவா. நீங்க ஏன் இதிலே போய் மாட்டிக்கணும்?"

"அதான! நீ சொல்றதும் வாஸ்தவம் தான் லலிதா!"

"ரூபா ஸ்டோர்ஸ் போய் எனக்கு ஒரு பாக்கெட் சானிடரி டவல்ஸ் வாங்கிண்டு வந்துடுங்கோ. கத்தரிச்சாப்பல இடுப்பு வலி எனக்கு!"

"அப்படியா, நல்ல சேதி லல்லி!" என்று கிருஷ்ணமூர்த்தி மலர்ந்தார்.

**வ**ர்ஷாவும் பாலாவும் மற்ற மாணவர்களும் ஒல்லியான ஊர்வலமாக வந்து, நிருபதுங்கா ரோட்டில் டி. ஜி. ஆபீஸ் முன்னால் வந்து, கொஞ்ச நேரம் சப்தம் போட்டார்கள். பெண்களைவிடப் பெண்களை சைட் அடிக்க வந்த ஆண்கள் அதிகமாக இருந்தார்கள்.

"ஜனதா அரசே பெண்களைக் காப்பாற்று...

"குற்றவாளியைக் கண்டுபிடித்துத் தண்டனை கொடு!"

சோமசேகர் அவர்களிடம் வந்து "குட் ஈவினிங்" என்றார்.

"என்ன ஸார் இது அக்கிரமம்! பொதுப் பாதைகளில் பெண்கள் பத்திரமாகப் போகக் கூடாத நிலையில் மக்களிடம் வரிப் பணம் வாங்கி, போலீஸுக்கு எத்தனை செலவழிக்கிறீர்கள்! இன்னும் ஒரு வாரத்துக்குள் குற்றவாளியைக் கண்டுபிடிக்காவிட்டால் நீங்கள் ராஜினாமா செய்ய வேண்டும்!"

"உன் பேர் என்ன?"

"வர்ஷா."

"சுமித்ராவின் கிளாஸ் மேட்டா?"

"உங்களுக்கு சுமித்ராவைத் தெரியுமா?"

"சுமாராகத் தெரியும் என்று நினைக்கிறேன். அவள் என் மகள்!"

"ஓ மை காட்! அங்க்கிள், நீங்கள் தான் சோமசேகர்?"

"ஆம். சுமித்ராவும் இந்த ஊர்வலத்தில உண்டா?"

"ஆம்! அதோ!"

"ஹாய் சுமி!"

"டாட், இப்போது நான் உங்கள் மகள் அல்ல. வீ வாண்ட்!"

"ஜஸ்டிஸ்!"

"வீ வாண்ட்!"

"ஜஸ்டிஸ்."

"ஆல் ரைட் மனுவைக் கொடுத்துவிட்டு அமைதியாகக் கலைந்து போகிறீர்களா?"

"ஒரு வாரத்துக்குள் ஒன்றும் நிகழவில்லையெனில்..."

"உண்ணாவிரதம் இருங்கள். சுமித்ரா, கொஞ்சம் உடம்பு இளைத்தால் நல்லது!"

"யூ ஆர் ஹார்ட்லெஸ் டாட்! 'வீ வாண்ட்'..." என்று தொண்டை நரம்பு புடைக்க, சோமசேகரின் மகள் கத்திக் கூச்சலிட்டாள்.

**டா**க்டர் பத்மினிராஜ் முன்னறையில் வந்து உட்கார்ந்து ராம்பிரகாஷ் கொடுத்த காப்பியை எடுத்துப் பருகி, "குட் காஃபி" என்றாள்.

"அவள் எந்த நிலையில் இருக்கிறாள் பத்மினி?"

"கோர்வையாக இன்னும் பேசவில்லை. அதிர்ச்சியின் விளைவுகள் உடலிலும் மனத்திலும் பாக்கியிருக்கின்றன."

"பத்மினி ஒரு கேள்வி கேட்கட்டுமா?"

"உங்கள் கேள்விக்குப் பதில் 'ஆம்' நிச்சயமாக, ஊர்ஜிதமாக... டாக்டர், நீங்கள் ஒரு சைக்காலஜிஸ்ட்..."

"மற்றவர்களுக்குத்தான் என் சைக்காலஜி!"

"இல்லை, உங்களுக்கு இப்போது ஒரு மகத்தான பொறுப்பு இருக்கிறது. இந்தச் சம்பவத்தின் அதிர்ச்சியை மழுப்ப வேண்டியது!"

"எப்படி? அதைப் பற்றிப் பேசாமல் இருந்தால் அவளே ஆரம்பிக்கிறாளே!"

"டெல் ஹர் இட் இஸ் நத்திங். கன்வின்ஸ் ஹர்! டாக்டர், நடந்தது ஒரு விபத்து. ஒரு கூட்டத்தின் நெரிசலில் பல பேர் மேல் படுவதில்லையா, அதுபோல. இதைப் பற்றி களங்கம், புனிதம் போன்ற சம்பிரதாய வார்த்தைகளையெல்லாம் தகர்த்துவிட்டு, 'விபத்து' என்னும் ஒரே ஒரு வார்த்தைதான் செல்லும். முதன் முதலில் உங்களுக்கு அதில் நம்பிக்கை வேண்டும். டாக்டர் பிரகாஷ், உங்களுக்கு இதில் ஏதும் விரசமில்லைதானே?"

டாக்டர் தயங்கி, "இல்லை" என்றார்.

(தொடரும்)

---

**"அரசே! என்ன, இது? தாங்கள் போய், ஆராய்ச்சி மணியை அடித்துக் கொண்டு....?"**

**"எனக்கு மட்டும், 'மனக் குறை' இருக்காதா, அமைச்சரே?"**

— ஆர். அப்துல் சலாம்.





இந்தி மொழிக் குட்டிக் கதை

# நஷ்டஈடு

— கன்வர் நாராயண்

அவனது புஷ்—சர்ட்டின் கைப்பகுதி என் கார்க் கதவின் கைப்பிடியில் சிக்கி, கார் நகர்ந்த போது கிழிந்து விட்டது. எப்பொழுது கிழிந்ததென்பது எனக்கோ, அவனுக்கோ, கடவுளுக்கோ கூடத் தெரியாது. எவ்வாறாயினும் இந்நிகழ்வு ஒரு விபத்துத்தான். மிகுந்த சிரமத்திற்குப் பின் கார் ஸ்டார்ட் ஆனதும் அவன் திடீரென்று சைக்கிளிலிருந்து குதித்தான். அவன் முகம் சிவந்து விட்டது. அவன் தன் வசம் இழந்து விட்டான். ''உங்களுக்குக் கண்கள் இல்லையா?'' என்றான்.

அவனை முறைத்துப் பார்த்த நான் ''எனக்குக் கண்கள் இருக்கின்றன. உன் கண்களை விடப் பார்வையும் நன்றாயிருக்கிறது'' என்றேன்.

''என்ன சொல்கிறீர்கள்?'' அவன் உரக்கக் கத்தினான்.

''ஆமாம்... சைக்கிளைப் போன்ற ஒரு சின்னப் பொருளை என்னால் பார்க்க முடியாதென்றால், காரைப் போன்ற ஒரு பெரிய பொருளை உன்னால் பார்க்க முடியாது...'' என்றேன்.

''சிறியதா, பெரியதா என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. நஷ்டம் யாருக்கு? உங்களுக்கா? அல்லது எனக்கா?'' என்றான் இன்னும் உரத்த குரலில்.

''எனக்கு ஏன் நஷ்டம் ஏற்படுகிறது. நீதான் ராங் சைடில் வந்தாய்'' எனப் பதிலிறுத்தேன். நிலைமையை விளக்கி அவனை யோசிக்குமாறு செய்ய மீண்டும் முயன்றேன். இதற்குள் எங்களைச் சுற்றிக் கூட்டம் கூடி விட்டது. எனது கருத்து நிலையைப் புரிந்து கொள்ளாமலேயே கூட்டத்தினர் அவனிடம் விளக்க முயன்றனர். அவனோ தனது நிலையை எனக்கு எடுத்துக் கூற முயன்றான். விளைவு, ஒரே சமயத்தில் அனைவரும் பேசிக் கொண்டிருந்தனர். யார், யாரிடம், யாருக்காகப் பேசுகிறார் என்பதே தெரியவில்லை. சிறிது நேரம் இந்நிலை நீடித்தது. கடைசியில் கூட்டத்தினர் சலிப்படைந்தனர். நாங்கள் மீண்டும் சண்டையைத் தொடர வாய்ப்பேற்பட்டது.

நான் எனது காரை விட்டு இறங்கவில்லை. அவன் காலையில் தன் சைக்கிளில் சாய்ந்தவாறே நின்று கொண்டிருந்தான். எங்களைச் சுற்றி வேடிக்கை பார்ப்பவர்களின் கூட்டம். ஒரு பதற்றச் சூழல் நிலவியது. எந்த நேரத்திலும் வன்முறை நிகழலாம். யாரேனும் ஒருத்தர் கையை ஓங்கினால் கூடப் போதும். ஒரு பெருங் கலகமே ஏற்பட்டு விடும். சைக்கிள்காரன் செல்வாக்கு மிக்க பொது ஜனத் தலைவரைப் போல் ஒரு பிரசங்கம் நிகழ்த்துவதற்குக் கூட்டத்தினரை நோட்டமிட்டான். ''சகோதர, சகோதரிகளே, கொஞ்ச நேரம் அமைதியாயிருக்க வேண்டுகிறேன். அவ்வாறானால்தான் இவரிடம் நான் பேச முடியும். நஷ்டம் எனக்குத்தான். உங்களுக்கல்ல. எனவே தயவு செய்து நீங்கள் இதில் தலையிட வேண்டாம். வேண்டுமானால் கொஞ்சம் வேடிக்கை

பார்த்துவிட்டு உங்கள் வழியே செல்லுங்கள்.'' என்றான்.

பின்னர் அவன் என் பக்கம் திரும்பி, ''ஐயா! இங்கே பாருங்கள். உங்கள் காரினால்தான் என் சட்டை கிழிந்து விட்டது. இதோ கிழிந்த சட்டை சாட்சி. ஆனால் நான் ராங் சைடில் வந்ததற்கு உங்களிடம் என்ன சான்று உள்ளது?'' என்றான்.

''என்னுடைய கார் இன்னும் கூட இடது புறத்தில்தானிருக்கிறது....

''அதனாலென்ன? வலது புறம் யார் போகிறார்கள் எனப் பார்த்துக் கொள்ள வேண்டியது உங்கள் கடமை'' என மிகுந்த கோபத்துடன் தனது கிழிந்து போன சட்டையின் கைப் பகுதியைக் கொடியசைப்பது போல் காற்றில் அசைத்தான். கூட்டத்தில் முதலில் ஒரு சிலர் மட்டும் அவன் சொன்னதை ஒப்புக் கொண்டனர். பின்னர் அனைவருமே அவனோடு சேர்ந்து கொண்டனர்.

நிலைமை மோசமாகி விட்டது. வெகு சீக்கிரத்தில் நடக்கக் கூடாத ஒன்று நடந்து விடும் போல் தோன்றியது. நிலைமையைச் சமாளிக்க என்னை நான் தயார்ப்படுத்திக் கொண்டேன். அவன் லேசில் விட்டு விடும் ஆளாகத் தெரியவில்லை. காரின் கதவைத் திறந்து நான் வெளியே வந்தேன்.

கூட்டத்தில் புயலுக்கு முன் காணப்படும் அமைதி நிலை காணப்பட்டது. யாராவது ஒருவர் திர்மானமான ஒரு செயலைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. திடீரென அவன் தனது சைக்கிளை மின் விளக்குக் கம்பத்தில் சாத்தினான். கூட்டத்தினர் இருபுறமும் வியூகம் வகுத்து நின்றனர். நான் சட்டைப் பித்தான்களைக் கழற்றத் துவங்கினேன். அவனும் அவ்வாறே செய்தான். கூட்டத்தினர் வைத்த கண் வாங்காமல் எங்களையே பார்த்தனர். கோபம் கொப்பளிக்க அவனை முறைத்த நான் தயக்கமேதுமின்றி என் சட்டையைக் கழற்றினேன். அவனும் தன் சட்டையைக் கழற்றினான். சண்டை போடுவதற்கு முன்னால் இரண்டு நாய்கள் ஒன்றையொன்று பார்ப்பது போல் நாங்களிருவரும் பார்த்துக் கொண்டோம். முதலில் நான்தான் சண்டையிடத் துவங்குவேன் என அவனும் கூட்டத்தினரும் ஆவலுடன் எதிர்பார்த்து நின்றனர்.

ஆனால் நான் முன்னேறிச் செல்வதற்குப் பதில் எனது 'புஷ்சர்ட்டை' அவனிடம் கொடுத்தேன். அவன் திகைத்துப் போய் விட்டான்.

''இதை வைத்துக் கொள்'' என்றேன்.

''என்ன இது'' ஒன்றும் தெரியாதவன் போல் அவன் கேட்டான்.

''நஷ்ட ஈடு! கிழிந்து போன உன் சட்டைக்குப் பதில் என் சட்டையை வைத்துக் கொள்!'' என்று மிகச் சாதாரணமாகக் கூறினேன்.

தமிழாக்கம்:

**நெல்லை. எஸ். வேலாயுதம்.**


## ஆஸ்திகப் பெருமக்களுக்கு ஒரு வேண்டுகோள்



பேரன்புடையீர்,

சென்னை, பரங்கிமலை தொடங்கி, தாம்பரம் வரையிலும், சுமார் 20 ஆண்டு காலத்திற்குள், பல்லாயிரக்கணக்கான, இந்து குடி இருப்புகள் பல இதர வசதிகளுடன் வளர்ந்துள்ளது. ஆயினும் இந்து சமயத்தார், காலகதி அடைந்தவர்களின் ஈமக் கிரியைகளும், இதர சிரார்த்தம் போன்ற வைதிக கர்மாக்களும் நடைபெற ஒரு வசதியும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தக் குறையினை நீக்கச் சென்னை, குரோம்பேட்டை ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட் என்ற ஓர் அமைப்பு தன்னை இப்பணிக்கு அர்ப்பணித்துக் கொண்டு, ஸ்ரீ காயத்ரி ஞானவாபி என்ற கட்டிடத்தை உருவாக்கி வருகிறது.

இந்தக் கட்டிடம் குரோம்பேட்டை ரயில் நிலையத்திலிருந்து மேற்கே சுமார் 1 கிலோ மீட்டர் தூரத்தில், லக்ஷ்மிபுரத்தில் அமைந்துள்ளது.

இந்த முயற்சிக்கு காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளும், அகோபில மடம், ஸ்ரீ அழகிய சிருங்கர் ஸ்வாமிகள், மற்றும் பெரியாஸ்ரமம், ஸ்ரீ ஆண்டவன் ஸ்வாமிகள் அவர்களும், அருளாசி வழங்கி ஸ்ரீமுகம் அளித்துள்ளார்கள்.

இதனைக் காணுரும் ஆஸ்திக பெருமக்கள் தங்களால் இயன்ற நிதி மற்றும் கட்டுமானப் பொருள்கள் மூலம் உதவி செய்து இந்த முயற்சி பூர்த்தி அடைய வழிவகை செய்ய வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
காயத்ரி டிரஸ்ட்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:
ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட்,
45, லக்ஷ்மி நகர்,
குரோம்பேட்டை, சென்னை — 44.

பி. கு.: நன்கொடைகளுக்கு (80— G) வருமான வரிவிலக்கு உண்டு.

# என்.டி.ஆரின் வருத்தமும் எம்.ஜி.ஆரின் தூக்கமும்

ஜெயலலிதாவின் அம்மா சந்தியா காலம் முதலே மேக்-அப் தொழிலேச் செய்து வருபவர் பீதாம்பரம். கேரளாவைச் சேர்ந்த இவர், தமிழ்நாட்டுக்கு வந்த போது கோடம்பாக்கம் காடு மாதிரி இருந்ததாம். பிரபல மேக்—அப் மேன் ஹரிபாபுவிடம் தொழில் கற்ற இவரை, இவரது ஆழ்ந்த அனுபவம் கருதி, ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் பணியாற்ற அழைத்த போது, ஒப்புக் கொள்ள மறுத்து விட்டார்! சினிமாவிலிருந்து அரசியலுக்கு வந்த இரு தென்னிந்திய கலேஞர்கள் பற்றிக் கூறுகிறார் பீதாம்பரம்:

"நான் கல்லூரியில் படித்த நாட்களில் தினமும் அதிகாலேயில் அம்மாவுக்கு வீட்டு வேலேகளெல்லாம் செய்து கொடுத்து விட்டு, ரயில் பிடித்து நிம்மக்கூரிலிருந்து குண்டூர் காலேஜுக்குப் போவேன்; காலேஜ் முடிந்ததும் மீண்டும் இருபத்தைந்து மைல் ரயில் பிரயாணம் செய்து வீடு போய்ச் சேர்ந்து, அம்மாவுக்கு உதவுவேன். அப்படி உழைத்துப் படித்தவன் நான். ஆனல் வசதிகள் நிறைந்த வாழ்க்கையை அனுபவிக்கும் எனது பிள்ளேகள் எஸ்.எஸ்.எல்.சி.யைக் கூடத் தாண்டவில்லேயே...' என்று என்.டி.ஆர். என்னிடம் மனம் விட்டுப் பேசியதுண்டு... அவர் ஆரம்பத்தில் சப் ரிஜிஸ்ட்ராராக வேலே பார்த்தவர் — கையெழுத்து அச்சுக் கோத்தது போல் முத்து முத்தாக இருக்கும்.

எளிமையான நிலேயிலிருந்து முன்னுக்கு வந்ததால் என்.டி.ஆர். உழைப்புக்கு அஞ்சியதே இல்லே. அதிகாலே மூன்று மணிக்கு எழுந்து சில பயில்வான்களுடன் தாமும் உடற்பயிற்சி செய்வார். நான்கு மணிக்குக் குளித்து விட்டு, அன்றைய பணிகளேக் கவனிக்கத் தயாராகி விடுவார். அவருக்கு நன்ருகவே தமிழ் எழுத, படிக்க வரும். இன்னும் ஆழமாகத் தமிழ் கற்றுக் கொள்ளும் ஆர்வத்தில் ஒரு தமிழாசிரியரை அமர்த்திக் கொண்டார். ஒரு சமயம் அவர் என்னிடம் விளேயாட்டாகச் சொன்னர்: ''இந்தத் தமிழாசிரியரிடம் நான் தமிழ் கற்றுக் கொள்வதற்குப் பதில் அவருக்கு நான் தெலுங்கு சொல்லிக் கொடுத்து விட்டேன்!'

''1950 முதல் நான் என். டி. ஆருக்கு மேக்—அப் செய்து வருகிறேன். புராண பாத்திரமானுலும் சமூகக் கதையானுலும் நான்தான் அவருக்கு மேக்—அப் போட வேண்டும். எம்.ஜி.ஆருக்கும் நானே மேக்—அப் போட்டதால் இரண்டு மிகப் பிரபல



* எம்.ஜி.ஆருடன் பீதாம்பரம்

* என்.டி.ஆருடன் பீதாம்பரம்: உடனிருப்பவர் — ஆமாம் — பாலகர் ராவ்தான்!



'பிளி' கலைஞர்களின் நேரத்துக்கு ஏற்ப 'அட்ஜஸ்ட்' செய்து கொண்டு பணியாற்ற வேண்டியிருந்தது. கடைசி வரை இதை வெற்றிகரமாகச் சமாளித்தேன். இருவருமே முதல்வர்கள் ஆன பிறகு நான் மேக்—அப் போடுவதையே நிறுத்தி விட்டேன்!

"எம். ஜி. ஆர்., 147, சைனு பஜார் ரோட்டில் இருந்த காலம் தொட்டே எனக்கு அவருடன் நல்ல பழக்கம். நாங்கள் அப்போது அதற்குப் பக்கத்துத் தெருவில் இருந்தோம். அவர் ஓர் அற்புதமான மனிதர்! 1940 களில் நாங்கள் பஸ்ஸிலும் டிராமிலும் சுற்றியதெல்லாம் இப்போதுதான் நடந்தது போல் இருக்கிறது. எங்கள் குடும்பத்தில் அவருக்கு மூத்த மகன் ஸ்தானம்! என் அம்மா மரணப்படுக்கையில் இருந்த போது கூட 'எங்கே? என் மூத்த மகன் வரவில்லையே....?' என்றுதான் கேட்டார்.

"டிரெஸ்ஸிங் ரூமில் அவருக்கு நான் மேக் அப் செய்து கொண்டிருப்பேன். கண்களை மூடிக் கொண்டு விடுவார். இலேசான குறட்டை ஒலி கூடக் கேட்கும்... அந்தச் சமயத்தில் அசோசியேட் டைரக்டர்கள் வருவார்கள், காட்சிகளை விவரிப்பார்கள்... திடீரென்று, 'ஏற்கெனவே இது மாதிரி ஒரு வசனம் வந்துவிட்டது அதனால் இதை மாற்றி விடு!' என்பார். அவர் தூங்கவில்லை யோசனையில் இருக்கிறார் என்பதே அப்போதுதான் புரியும்!

"வெளியூரில் படப்பிடிப்புக்குப் போனால் தங்கும் வசதி எல்லோருக்கும் சரியாகச் செய்யப்பட்டுள்ளதா என்று முன் கூட்டியே கருத்தோடு விசாரித்து ஊர்ஜிதம் செய்து கொள்வார். உலகம் சுற்றும் வாலிபன் படத்துக்காக ஜப்பான், ஹாங்காங் சிங்கப்பூரெல்லாம் சென்றோம். அப்போது அவர்தான் எங்களுக்குத் தேவையான சூட்டிங் துணிகளையெல்லாம் வாங்கித் தந்தார்.

"என்.டி.ஆரை 'என் தம்பி' என்று அன்புடன் குறிப்பிடுவார் எம்.ஜி.ஆர். என்.டி. ஆரும் அவரை அண்ணன் என்றுதான் அழைப்பார். நானும் அவரைச் 'சேட்டா' (அண்ணன்) என்றுதான் மலையாளத்தில் அழைப்பேன். பல முறை ஒருவரிடமிருந்து மற்றவருக்குச் செய்தி சுமந்து போயிருக்கிறேன்" என்று கூறும் பீதாம்பரத்தின் கை விரல் மோதிரத்தில் எம்.ஜி.ஆர். சிரிக்கிறார்!

சந்திப்பு: **சாருகேசி**

புகைப்படங்கள்: **சுதாகர்**

## கச்சத் தீவில் சு. சுவாமி

கச்சத்தீவுக்கு சுப்பிரமணிய சுவாமி போனாரே. எதற்கு?

ராமேசுவரத்திலிருந்து பதினாறு கி. மீ. தூரத்தில் உள்ளது ஐந்து சதுரமைல் பரப்புள்ள கச்சத்தீவு. 1974 — இல் ஓர் ஒப்பந்தப்படி இந்தியா இதனை இலங்கைக்கு வழங்கிவிட்டது. (பிரதமர்கள்: சிரிமாவோ — இந்திரா காந்தி) ஆனால் இந்திய மீனவர்களின் உரிமைகளுக்கு ஒப்பந்தம் பாதுகாப்புத் தந்தது. இவர்களுக்கு விசா, பாஸ்போர்ட் தேவையில்லை.

இலங்கைத் தமிழர் பிரச்னை தீவிரமடைய மீனவர் போராளிகளுக்கு உதவுகிறார்களோ என்ற சந்தேகத்தினால் ரோந்துப் படையினர் கொடுத்த தொல்லைகளுக்கு மீனவர்கள் உள்ளானார்கள். இதனால் மீனவர் மீன் பிடிக்கப் போவதை நிறுத்திக் கொண்டார்கள். ஒப்பந்தப்படி அவர்கள் உரிமைகள் பாதிக்கப்பட்டுள்ளன.

இதனைச் சுட்டிக் காட்டி. மீனவர் உரிமையை நிலை நாட்டத்தான் சு. சுவாமி போனது. தீவை நெருங்கும் போது கடல் ஆழமில்லாததால் விசைப் படகு போக முடியாது போக, சு. சுவாமி நீந்திச் சென்றார். வழியில் நிறைய மீன் பிடித்தார் சு. சுவாமி. இப்பகுதி மீன்கள் முதல் தரம்!



தகவல்: கே. ஆர். மோதிலால்

எழுதியவர்: ஜூலி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104 /—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

திய

# ிப்டன் டாப் ஸ்டார் டீ
# ுவையே அதன் வலிமை



ிப்டன் டாப் ஸ்டார்.
வைதான் எப்போதும்
தன் மாபெரும்
லிமை. இப்போதுஇது
ன்னும் மேன்மையாக
கழ்கிறது. ஏனெனில்
வ்வகை இதர டீக்களைவிட அதிக சுவையும்
ண்மையும் கொண்ட மிஞ்சிடும் கலவையை புதிய
ப்டன் டாப்ஸ்டார் கொண்டுவந்துள்ளது.
யன்றுதான் பாருங்களேன்!
வறுபாட்டினை நீங்களும் உணர்ந்திடுவீர்.

இப்போது லிப்டன் டாப் ஸ்டார் பொலிவான
திய பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.




லிப்டன்
ப் ஸ்டார் டீ
ியும் சக்தியும்
ற்றிகரமான கொண்ட இணைப்பு

LINTAS BLORE LIL TS P1 2416 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

PONDS




## பொன் நகைகள் மின்னிட.... சந்தன நறுமணம் கமழ்ந்திட....

இனிய உணர்வுகள் மனதில் மலர்ந்திடும் கணங்கள். உங்கள் மேனியில் பொன் நகைகள் மின்னிட, தூய சந்தனத்தின் நறுமணம் கமழ்ந்திட இதுவரை அனுபவித்தறியா உணர்வுகளால் உள்ளம் பூரிக்கிறது; பெண்மை உங்களிடம் பூரண பொலிவு பெறுகிறது.

அரிய நறுமணம், மதிப்பில் பொன்னைப் போல் உயர்ந்தது.

# பாண்ட்ஸ் சாண்டல் டால்க்

HTA 7023